தமிழ் - ஆங்கிலம்

திருக்குறள்



THIRUKKURAL

TAMIL-ENGLISH

English Translation

**Rev. G.U.POPE**



நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 600 098.
☎: 26251968, 26359906, 26258410

Language: Tamil & English
**THIRUKKURAL**
**(Tamil-English)**
**English** Translation: **G.U.Pope**
**First** Edition : April, 2008
Revised Second Edition : September, 2012

No.of Pages : xvi + 292 = 308
Publisher:
**New Century Book House Pvt. Ltd.,**
Chennai - 600 098.
Tamilnadu State, India.
Email : ncbhbook@yahoo.co.in

**ISBN 978-81-234-0949-4**
**Code No.A 1376**
**Rs.30.00**

Branches

Ambattur (H.O.) 044-26359906, 26258410, 26251968
Thiruvanmiyur 044-24404873 Spenzer Plaza (Chennai) 28490027
Trichy 0431-2700885 Tanjore 04362-231371 Tirunelveli 0462-2323990
Madurai 0452-2344106, 2350271 Dindigul 0451-2432172
Coimbatore 0422-2380554 Salem 0427-2450817 Hosur 04344-245726
Ooty 0423-2441743 Vellore 0416-2234495 Villupuram 04146-227800
Pondicherry 0413-2213111 Thiruvannamalai 04175-223449

திருக்குறள் (தமிழ் - ஆங்கிலம்)
ஆங்கில மொழிபெயர்ப்பு : ஜி.யு. போப்
முதல் பதிப்பு : ஏப்ரல், 2012
திருத்திய இரண்டாம் பதிப்பு : செப்டம்பர், 2012

# பதிப்புரை

ஓலைச் சுவடியாக இருந்த திருக்குறள் 1938-ல் அச்சுக்கு வந்தது. ஆங்கிலேய அறிஞரான எல்லிஸ்துரை திருக்குறளை நூல் வடிவில் தமிழுலகுக்குத் தந்தார். இதுவரை திருக்குறளுக்கு 270-க்கு மேற்பட்ட உரைநூல்கள் வெளிவந்துள்ளன. திருக்குறள் ஏட்டுச் சுவடியாக இருந்திருந்தால் இத்தனை உரை நூல்கள் வெளிவந்திருக்க இயலாது. புத்தகப் பதிப்புலகில் கண்கவர் வடிவமைப்பில், பல வண்ணங்களில், பல்துறை நூல்கள் வெளிவந்துகொண்டிருக்கின்றன. இருந்தாலும் திருக்குறள் நூல்களைப் பெருமளவில் மக்கள் வாங்கிப் படிக்கிறார்கள்.

திருக்குறள் 82க்கு மேற்பட்ட மொழிகளில் மொழி பெயர்க்கப்பெற்றுள்ளன. இதுவரை ஆங்கிலத்தில் மட்டும் 57 பேர் திருக்குறளை மொழிபெயர்த்துள்ளனர். ஆங்கில அறிஞரும் தமிழ் ஆராய்ச்சியாளருமான ஜி.யு.போப் அவர்களின் திருக்குறள் மொழிபெயர்ப்பு உரை ஆங்கில மொழிபெயர்ப்பு உரைகளில் முன்னோடியானதாகவும் முதன்மையானதாகவும் விளங்குகிறது.

தமிழைத் தனது உயிர் மூச்சாகக் கருதிப் போற்றி ஜி.யு.போப் அவர்களின் திருக்குறள் உரையை வெளியிட்டுப் பொதுமக்களின் பேராதரவை வேண்டுகிறோம்.

- பதிப்பகத்தார்

## 1. அறத்துப்பால்
## (VIRTUES)

பக்கம்

## 2. பொருட்பால்
## (WEALTH)

பக்கம்

## 3. காமத்துப்பால்
## (LOVE-LIFE)

Language: Tamil & English
**THIRUKKURAL**
**(Tamil-English)**
**English** Translation: **G.U.Pope**
**First** Edition : April, 2008
Revised Second Edition : September, 2012

No.of Pages : xvi + 292 = 308
Publisher:
**New Century Book House Pvt. Ltd.,**
Chennai - 600 098.
Tamilnadu State, India.
Email : ncbhbook@yahoo.co.in

**ISBN 978-81-234-0949-4**
**Code No.A 1376**
**Rs.30.00**

Branches

Ambattur (H.O.) 044-26359906, 26258410, 26251968
Thiruvanmiyur 044-24404873 Spenzer Plaza (Chennai) 28490027
Trichy 0431-2700885 Tanjore 04362-231371 Tirunelveli 0462-2323990
Madurai 0452-2344106, 2350271 Dindigul 0451-2432172
Coimbatore 0422-2380554 Salem 0427-2450817 Hosur 04344-245726
Ooty 0423-2441743 Vellore 0416-2234495 Villupuram 04146-227800
Pondicherry 0413-2213111 Thiruvannamalai 04175-223449

திருக்குறள் (தமிழ் - ஆங்கிலம்)
ஆங்கில மொழிபெயர்ப்பு : ஜி.யு. போப்
முதல் பதிப்பு : ஏப்ரல், 2012
திருத்திய இரண்டாம் பதிப்பு : செப்டம்பர், 2012

# 1. The Praise of God

1. A, as its first of letters, every speech maintains; The "Prima Deity" is first through all the world's domains.

2. No fruit have men of all their studied lore, save they the 'Purely Wise One's feet adore.

3. His feet, 'Who o'er the full-blown flower hath past,' who gain in bliss long time shall dwell above this earthly plain.

4. His foot, 'Whom want affects not,' irks not grief,' who gain shall not, through every time, of any woes complain.

5. The men, who on the 'King's true praised delight to dwell, Affects not them the fruit of deeds done ill or well.

6. Long live they blest, who've stood in path from falsehood freed; His, 'Who quenched lusts that from the sense - gates five proceed.'

7. Unless His foot, 'to whom none can compare,' men gain,' 'Tis hard for mind to find relief from anxious pain.

8. Unless His feet 'the Sea of Good, the Fair and Bountiful,' men gain, 'Tis hard the further bank of being's changeful sea to attain.

9. Before his foot, 'the Eight-fold Excellence,' with unbent head, who stands, like palsied sense, is to all living functions dead.

10. They swim the sea of births, the 'Monarch's foot who gain; None others reach the shore of being's mightily main.

# 1. கடவுள் வாழ்த்து

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. 1

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். 2

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். 3

வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. 4

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. 5

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். 6

தனக்குஉவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. 7

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது. 8

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. 9

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். 10

## 2. The Excellence of Rain

1. The world its course maintains through life that rain unfailing gives; Thus rain is known the true ambrosial food of all that lives.

2. The rain makes pleasant food for eaters rise; As food itself thirst - quenching draught supplies.

3. If clouds, that promised rain, deceive, and in the sky remain, Famine, sore torment, stalks o'er earth's vast ocean - girdled plain.

4. If clouds their wealth of waters fail on earth to pour, The ploughers plough with oxen's sturdy team no more.

5. 'Tis rain works all: it ruin spreads, then timely aid supplies, As, in the happy days before, it bids the ruined rise.

6. If from the clouds no drops of rain are shed. 'Tis rare to see green herb lift up its head.

7. If clouds restrain their gifts and grant no rain, the treasures fail in ocean's wide domain.

8. If heaven grow dry, with feast and offering never more, Will men on earth the heavenly ones adore.

9. If heaven its watery treasures ceases to dispense, Through the wide world cease gifts, and deeds of 'penitence'.

10. When water fails, functions of nature cease, you say; Thus when rain fails, no men can walk in 'duty's ordered way'.

# ௨. வான் சிறப்பு

வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று. 11

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை. 12

விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின்று உடற்றும் பசி. 13

ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால். 14

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற்று ஆங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை. 15

விசும்பின் துளிவீழின் அல்லால் மற்று ஆங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது. 16

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்துஎழிலி
தான்நல்கா தாகி விடின். 17

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு. 18

தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்காது எனின். 19

நீர்இன்று அமையாது உலகுஎனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு. 20

## 3. The Greatness of Ascetics

1. The settled rule of every code requires, as highest good, Their greatness who, renouncing all, true to their rule have stood.

2. As counting those that from the earth have passed away, 'Tis vain attempt the might of holy men to say.

3. Their greatness earth transcends, who, way of both worlds weighed, in this world take their stand, in virtue's to be arrayed.

4. He, who with firmness, curb the five restrains, is seed for soil of yonder happy plains.

5. Their might who have destroyed 'the five', shall soothly tell Indra, the lord of those in heaven's wide realms that dwell.

6. Things hard in the doing will great men do; Things hard in the doing the mean eschew.

7. Taste, light touch, sound, and smell: who knows the way, Of all the five, - the world submissive owns his sway.

8. The might of men whose word is never vain, The 'secret word' shall to the earth proclaim.

9. The wrath 'tis hard e'en for an instant to endure, Of those who virtue's hill have scaled, and stand secure.

10. Towards all that breathe, with seemly graciousness adorned they live; And thus to virtue's sons the name of 'Anthanar' men give.

# 3. நீத்தார் பெருமை

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு. 21

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று. 22

இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு. 23

உரன்என்னுந் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரன்எனும் வைப்பிற்குஓர் வித்து. 24

ஐந்துஅவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி. 25

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 26

சுவைஒளி ஊறுஓசை நாற்றம் என்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு. 27

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். 28

குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது. 29

அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான். 30

## 4. Assention of the Strength of Virtue

1. It yields distinction, yields prosperity; what gain Greater than virtue can a living man obtain?

2. No greater gain than virtue aught can cause; No greater loss than life oblivious of her laws.

3. To finish virtue's work with ceaseless effort strive, what way thou may'st where'er thou see'st the work may thrive.

4. Spotless be thou in mind! This only merits virtue's name; All else, mere pomp of idle sound, no real worth can claim.

5. 'Tis virtue when his footsteps sliding not through envy, wrath, Lust, evil speech-these four, man onwards moves in ordered path.

6. Do deeds of virtue now. Say not, 'To-morrow we'll be wise'; Thus, when thou diest, shalt thou find a help that never dies.

7. Needs not in words to dwell on virtue's fruits: compare, the man in litter borne with them that toiling bear!

8. If no day passing idly, good to do each day you toil, A stone it will be to block the way of future days of moil.

9. What from virtue floweth, yieldeth dear delight; All else extern, is void of glory's tight.

10. 'Virtue' sums the things that should be done; 'Vice' sums the things that man should shun.

# 4. அறன் வலியுறுத்தல்

சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தின்ஊஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு. 31

அறத்தின்ஊஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்குஇல்லை கேடு. 32

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல். 33

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற. 34

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம். 35

அன்றுஅறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றுஅது
பொன்றும்கால் பொன்றாத் துணை. 36

அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை. 37

வீழ்நாள் படாஅமை நன்றுஆற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்கும் கல். 38

அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த புகழும் இல. 39

செயற்பாலது ஒரும் அறனே ஒருவற்கு
உயற்பால தோரும் பழி. 40

## 5. Domestic Life

1. The men of household virtue, firm in way of good, sustain, The other orders three that rule professed maintain.
2. To anchorites, to indigent, to those who've passed away, The man for household virtue famed is needful help and stay.
3. The manes, God, guests kindred, self, in due degree, These five to cherish well is chiefest charity.
4. Who shares his meal with others, while all guilt he shuns, His virtuous line unbroken though the ages runs.
5. If love and virtue in the household reign, this is of life the perfect grace and gain.
6. If man in active household life a virtuous soul retain, What fruit from other modes of virtue can he gain?
7. In nature's way who spends his calm domestic days, Mid all that strive for virtue's crown hath foremost place.
8. Others it sets upon their way, itself from virtue ne'er declines; Than stern ascetics' pains such life domestic brighter shines.
9. The life domestic rightly bears true virtue's name; That other too, if blameless found, due praise may claim.
10. Who shares domestic life, by household virtues graced, shall, mid the Gods, in heaven who dwell, be placed.

# 5. இல்வாழ்க்கை

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. 41

துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை. 42

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை. 43

பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல். 44

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 45

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்
போஒய்ப் பெறுவது எவன். 46

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை. 47

ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து. 48

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று. 49

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும். 50

# 6. The Goodness of the help to Domestic Life

1. As doth the house be seem, she shows her wifely dignity; As doth her husband's wealth befit, she spends: help-meet is she.
2. If household excellence be wanting in the wife, However with splendour lived, all worthless is the life.
3. There is no lack within the house, where wife in worth excels, There is no luck within the house, where wife dishonoured dwells.
4. If woman might of chastity retain, What choicer treasure doth the world contain?
5. No God adoring, low she bends before her lord; Then rising, serves: the rain falls instant at her word!
6. Who guards herself, for husband's comfort cares, her household's fame, In perfect wise with sleepless soul preserves, - give her a woman's name.
7. Of what avail is watch and ward? Honour's woman's safest guard.
8. If wife be wholly true to him who gained her as his bride, Great glory gains she in the world where gods bliss abide.
9. Who have not spouses that in virtue's praise delight, They lion-like can never walk in scorner's sight.
10. The house's 'blessing', men pronounce the nouse-wife excellent; The gain of blessed children is its goodly ornament.

# 6. வாழ்க்கைத் துணைநலம்

மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. 51

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித்து ஆயினும் இல். 52

இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை. 53

பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின். 54

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை. 55

தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். 56

சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. 57

பெற்றால் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு. 58

புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை. 59

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. 60

## 7. The Obtaining of Sons

1. Of all that men acquire, we know not any greater gain, Than that which by the birth of learned children men obtain.

2. Who children gain, that none reproach, of virtuous worth, No evils touch them, through the sev'n-fold maze of birth.

3. 'Man's children are his fortune,' say the wise; From each one's deeds his varied fortunes rise.

4. Than God's ambrosia sweeter far the food before men laid, In which the little hands of children of their own have play'd.

5. To patent sweet the touch of children dear; Their voice is sweetest music to his ear.

6. 'The pipe is sweet,' 'the lute is sweet,' by them't will be averred, Who music of their infant's lisping lips have never heard.

7. Sire greatest boon on son confers, who makes him meet, In councils of the wise to fill the highest seat.

8. Their children's wisdom greater than their own confessed, Through the wide world is sweet to every human breast.

9. When mother hears him named 'fulfill'd of wisdom's lore,' Far greater joy she feels, than when her son she bore.

10. To sire, what best requital can by grateful child be done? To make men say, 'What merit gained the father such a son?'

# 7. மக்கட்பேறு

பெறுமவற்றுள் யாம்அறிவது இல்லை அறிவுஅறிந்த
மக்கட்.பேறு அல்ல பிற. 61

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கள் பெறின். 62

தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும். 63

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ். 64

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு. 65

குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர். 66

தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல். 67

தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க்கு எல்லாம் இனிது. 68

ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். 69

மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல். 70

## 8. The Possession of Love

1. And is there bar that can even love restrain? The tiny tear shall make the lover's secret plain.

2. The loveless to themselves belong alone; The loving men are other's to the very bone.

3. Of precious soul with body's flesh and bone, The union yields one fruit, the life of love alone.

4. From love fond yearning springs for union sweet of minds; And that the bond of rare excelling friendship binds.

5. Sweetness on earth and rarest bliss above, these are the fruits of tranquil life of love.

6. The unwise deem love virtue only can sustain, It also helps the man who evil would restrain.

7. As sun's fierce ray dries up the boneless things, So loveless beings virtue's power to nothing brings.

8. The loveless soul, the very joys of life may know, When flowers, in barren soil, on sapless trees, shall blow.

9. Though every outward part complete, the body's fitly framed; What good, when soul within, of love devoid, lies halt and maimed?

10. Bodies of loveless men are bony framework clad with skin; Then is the body seat of life, when love resides within.

# 8. அன்புடைமை

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும். 71

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. 72

அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு. 73

அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்புஎன்னும் நாடாச் சிறப்பு. 74

அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு. 75

அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. 76

என்பிலதனை வெயில்போலக் காயுமே
அன்பிலதனை அறம். 77

அன்பகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று. 78

புறத்துறுப்பு எல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு. 79

அன்பின் வழியது உயிர்நிலை அஃதுஇலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. 80

## 9. Cherishing Guests

1. All household cares and course of daily life have this in view. Guests to receive with courtesy, and kindly acts to do.

2. Though food of immortality should crown the board, Feasting alone, the guests without unfed, is thing abhorred.

3. Each day he tends the coming guest with kindly care; Painless, unfailing plenty shall his household share.

4. With smiling face he entertains each virtuous guest, 'Fortune' with gladsome mind shall in his dwelling rest.

5. Who first regales his guest, and then himself supplies, O'er all his fields, unsown, shall plenteous harvests rise.

6. The guest arrived he tends, the coming guest expects to see; To those in heavenly homes that dwell a welcome guest is he.

7. To reckon up the fruit of kindly deeds were all in vain; Their worth is as the worth of guest you entertain.

8. With pain they guard their stores, yet 'All forlorn are we' they'll cry, who cherish not their guests, nor kindly help supply.

9. To turn from guests is penury, though wordly goods abound; 'Tis senseless folly, only with the senseless found.

10. The flower of 'Anicha' withers away, If you do but its fragrance inhale; If the face of the host cold welcome convey, the guest's heart within him will fail.

# 9. விருந்தோம்பல்

இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தல் பொருட்டு. 81

விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
மருந்துஎனினும் வேண்டற்பாற் றன்று. 82

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று. 83

அகன்அமர்ந்து செய்யாள் உறையும் முகன்அமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல். 84

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். 85

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. 86

இனைத்துணைத்து என்பதொன்று இல்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன். 87

பரிந்துஓம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார். 88

உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு. 89

மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 90

## 10. The Utterance of Pleasant Words

1. Pleasant words are words with all pervading love that burn; Words from his guileless mouth who can the very truth discern.

2. A pleasant word with beaming smiles preferred, Even to gifts with liberal heart conferred.

3. With brightly beaming smile, and kindly light of loving eye, and heart sincere, to utter pleasant words is charity.

4. The men of pleasant speech that gladness breathe around, Through indigence shall never sorrow's prey be found.

5. Humility with pleasant speech to man on earth, Is choice adornment; all besides is nothing worth.

6. Who seeks out good, words from his lips of sweetness flow; In him the power of vice declines, and virtues grow.

7. The words of sterling sense, to rule of right that strict adhere, To virtuous action prompting, blessings yield in every sphere.

8. Sweet kindly words, from meanness free, delight of heart, In worlds to come and in this world impart.

9. Who sees the pleasure kindly speech affords, Why makes he use of harsh, repellant words?

10. When pleasant words are easy, bitter words to use, Is leaving sweet ripe fruit, the sour unripe to choose.

## 10. இனியவை கூறல்

இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். 91

அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின். 92

முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினிதே அறம். 93

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. 94

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற. 95

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். 96

நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல். 97

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும். 98

இன்சொல் இனிதுஈன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. 99

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 100

# 11. The Knowledge of Benefits Conferred: Gratitude

1. Assistance given by those who ne'er received our aid, Is debt by gift of heaven and earth but poorly paid.
2. A timely benefit, - though thing of little worth, The gift itself, in excellence transcends the earth.
3. Kindness shown by those who weigh not what the return may be; when you ponder right its merit, 'Tis vaster that the sea.
4. Each benefit to those of actions' fruit who rightly deem, Though small as millet-seed, as palm-tree vast will seem.
5. The kindly aid's extent is of its worth no measure true; Its worth is as the worth of him to whom the act you do.
6. Kindness of men of stainless soul remember evermore! Forsake thou never friends who were thy stay in sorrow sore!
7. Through all seven worlds, in seven-fold birth, Remains in mem'ry of the wise. Friendship of those who wiped on earth, The tears of sorrow from their eyes.
8. 'Tis never good to let the thought of good things done thee pass away; Of things not good; 'tis good to rid thy memory that very day.
9. Effaced straightway is deadliest injury, By thought of one kind act in days gone by.
10. Who every good have killed, may yet destruction flee; Who 'benefit' has killed, that man shall ne'er 'scape free!

# 11. செய்ந்நன்றி அறிதல்

செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது. 101

காலத்தி னால்செய்த நன்றி சிறிதுஎனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 102

பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது. 103

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார். 104

உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. 105

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு. 106

எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு. 107

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று. 108

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்றுள்ளக் கெடும். 109

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 110

# 12. Impartiality

1. If justice, failing not, its quality maintain, Giving to each his due, - 'tis man's one highest gain.

2. The just man's wealth unwasting shall endure, And to his race a lasting joy ensure.

3. Though only good it seem to give, yet gain, By wrong acquired, not e'en one day retain!

4. Who just or unjust lived shall soon appear. By each one's offspring shall the truth be clear.

5. The gain and loss in life are not mere accident; Just mind inflexible is sage's ornament.

6. If, right deserting, heart to evil turn, Let men impending ruin's sign discern!

7. The man who justly lives, tenacious of the right, In low estate is never low to wise man's sight.

8. To stand, like balance-rod that level hangs and rightly weighs, With calm unbiased equity of soul, is sages' praise.

9. Inflexibility in word is righteousness, If men inflexibility of soul possess.

10. As thriving trader is the trader known, who guards another's interests as his own.

## 12. நடுவு நிலைமை

தகுதி எனஒன்று நன்றே பகுதியால்
பாற்பட்டு ஒழுகப் பெறின். 111

செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து. 112

நன்றே தரினும் நடுவுஇகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். 113

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும். 114

கேடும் பெருக்கமும் இல்லல்ல் நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி. 115

கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுஒரீஇ அல்ல செயின். 116

கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு. 117

சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்துஒருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி. 118

சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உள்கோட்டம் இன்மை பெறின். 119

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின். 120

## 13. The Possession of Self-restraint

1. Control of self does man conduct to bliss the immortals share; Indulgence leads to deepest night, and leaves him there.

2. Guard thou as wealth the power of self-control; Than this no greater gain to living soul!

3. If versed in wisdom's lore by virtues's law you self restrain. Your self-repression known will yield you glory's gain.

4. In his station, all unswerving, if men self subdue, Greater he than mountain proudly rising to the view.

5. To all humility is goodly grace; but chief to them with fortune blessed, - 'tis fortune's diadem.

6. Like tortoise, who the five restrains In one, through seven world bliss obtains.

7. Whate'er they fail to guard, o'er lips men guard should keep; If not, through fault of tongue, they bitter tears shall weep.

8. Though some small gain of good it seem to bring, The evil word is parent still of evil thing.

9. In flesh by fire inflamed, nature may thoroughly heal the sore; In soul by tongue inflamed, the ulcer healeth never more.

10. Who learns restraint, and guards his soul from wrath, Virtue, a timely aid, attends his path.

## 13. அடக்கம் உடைமை

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். 121

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனின்ஊஉங்கு இல்லை உயிர்க்கு. 122

செறிவுஅறிந்து சீர்மை பயக்கும் அறிவுஅறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின். 123

நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது. 124

எல்லார்க்கும் நன்றுஆம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து. 125

ஒருமையுள் ஆமைபோல் ஐந்துஅடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து. 126

யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 127

ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றுஆகா தாகி விடும். 128

தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு. 129

கதம்காத்துக் கற்றுஅடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து. 130

# 14. The Possession of Decorum

1. 'Decorum' gives especial excellence; with greater care 'Decorum' should men guard than life, which all men share.

2. Searching, duly watching, learning, 'decorum' still we find; Man's only aid; toiling, guard thou this with watchful mind.

3. 'Decorum's true nobility one earth; 'Indecorum's issue is ignoble birth.

4. Though he forget, the Brahman may regain his Vedic lore; Failing in 'decorum due, 'birthright's gone for evermore.

5. The envious soul in life no rich increase of blessing gains, So man of 'due decorum' void no dignity obtains.

6. The strong of soul no jot abate of 'strict decorum's laws, Knowing that 'due decorum's breach foulest disgrace will cause.

7. 'Tis source of dignity when 'true decorum' is preserved; Who break 'decorum's rules endure e'en censures undeserved.

8. 'Decorum true' observed a seed of good will be; 'Decorum's breach' will sorrow yield eternally.

9. It cannot be that they who 'strict decorum's law fulfil, E'en in forgetful mood, should utter words of ill.

10. Who know not with the world in harmony to dwell, May many things have learned, but nothing well.

# 14. ஒழுக்கம் உடைமை

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். 131

பரிந்துஓம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்துஓம்பித்
தேரினும் அஃதே துணை. 132

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். 133

மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும். 134

அழுக்காறு உடையான்கண் ஆக்கம்போன்று இல்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு. 135

ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக்கு அறிந்து. 136

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி. 137

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். 138

ஒழுக்க முடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல். 139

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். 140

## 15. Not Coveting Another's Wife

1. Who laws of virtue and possession's rights have known, Indulge no foolish love of her by right another's own.

2. No fools, of all that stand from virtue's pale shut out, Like those who longing lurk their neighbour's gate without.

3. They're numbered with the deed e'en while they live, - how otherwise? With wife of sure confiding friend who evil things devise.

4. How great soe'er they be, what gain have they of life, Who, not a whit reflection, seek a neighbour's wife.

5. 'Mere trifle!' saying thus, invades the home, so he ensures, A gain of guilt that deathless aye endures.

6. Who home invades, from his pass nevermore, Hatred and sin, fear, foul disgrace; these four.

7. Who sees the wife, another's own, with no desiring eye, In sure domestic bliss he dwelleth ever virtuously.

8. Manly excellence, that looks not on another's wife, Is not virtue merely, 'tis full 'propriety' of life.

9. Who're good indeed, in earth begirt by ocean's gruesome tide? The men who touch not her that is another's bride.

10. Though virtue's bounds he pass, and evil deeds hath wrought; At least, 'tis good if neighbour's wife he covet not.

# 15. பிறன்இல் விழையாமை

பிறன்பொருளாள் பெட்டுஒழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல். 141

அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல். 142

விளிந்தாரின் வேறுஅல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்துஒழுகு வார். 143

எனைத்துணையர் ஆயினும் என்ஆம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல். 144

எளிதுஎன இல்லிறப்பான் எய்தும்எஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. 145

பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்இறப்பான் கண். 146

அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன். 147

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு. 148

நலக்குஉரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறற்குஉரியாள் தோள்தோயா தார். 149

அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. 150

## 16. The Possession of Patience, Forbearance

1. As earth bears up the men who delve into her breast, To bear with scornful men of virtues is the best.

2. Forgiving trespasses is good always; Forgetting them hath even higher praise;

3. The sorest poverty is bidding guest unfed depart; The mightiest might to bear with men of foolish heart.

4. Seek'st thou honour never tarnished to retain; So must thou patience, guarding evermore, maintain.

5. Who wreak their wrath as worthless are despised; who patiently forbear as gold are prized.

6. Who wreak their wrath have pleasure for a day; Who bear have praise till earth shall pass away.

7. Though others work thee ill, thus shalt thou blessing reap; Grieve for their sin, thyself from vicious action keep!

8. With overweening pride when men with injuries assail, By thine own righteous dealing shalt thou mightily prevail.

9. They who transgressors' evil words endure With patience are as stern ascetics pure.

10. Though 'great' we deem the men that fast and suffer pain, who others' bitter words endure, the foremost place obtain.

# 16. பொறை உடைமை

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 151

பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று. 152

இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. 153

நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும். 154

ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து 155

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ். 156

திறன்அல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறன்அல்ல செய்யாமை நன்று. 157

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல். 158

துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர். 159

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின். 160

## 17. Not envying

1. As 'strict decorum's laws, that all men bind, Let each regard unenvying grace of mind.

2. If man can learn to envy none on earth, 'Tis richest gift, beyond compare its worth.

3. Nor wealth nor virtue does that man desire 'tis plain, Whom others' wealth delights not, feeling envious pain.

4. The wise through envy break not virtue's laws, Knowing ill-deeds of foul disgrace the cause.

5. Envy they have within! Enough to seat their fate! Though foemen fail, envy can ruin consummate.

6. Who scans good gifts to others given with envious eye, His kin, with none to clothe or feed them, surely die.

7. From envious man good fortune's goddess turns away, Grudging him good, and points him out misfortune's prey.

8. Envy, embodied ill, incomparable bane, Good fortune slays, and soul consigns to fiery pain.

9. To men of envious heart, when comes increase of joy, Or less to blameless men, the 'why' will thoughtful hearts employ.

10. No envious men to large and full felicity attain; No men from envy free have failed a sure increase to gain.

## 17. அழுக்காறாமை

ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு. 161

விழுப்பேற்றின் அஃதுஒப்பது இல்லை யார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின். 162

அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணாது அழுக்கறுப் பான். 163

அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து. 164

அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடுஈன் பது. 165

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். 166

அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். 167

அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். 168

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். 169

அழுக்கற்று அகன்றாரும் இல்லை அஃது இல்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல். 170

# 18. Not Coveting

1. With soul unjust to covet others' well-earned store, Brings ruin to the home, to evil opens the door.

2. Through lust of gain, no deeds that retribution bring, Do they, who shrink with shame from every unjust thing.

3. No needs of ill, misled by base desire, Do they, whose souls to other joys aspire.

4. Men who have conquered sense, with sight from sordid vision freed, Desire not other's goods, e'en in the hour of sorest need.

5. What gain, though lore refined of amplest reach he learn, His acts towards all mankind if covetous desire to folly turn?

6. Though, grace desiring, he in virtue's way stand strong, He's lost who wealth desires, and ponders deeds of wrong.

7. Seek not increase by greed of gain acquired; That fruit matured yields never good desired.

8. What saves prosperity from swift decline? Absence of lust to make another's cherished riches thine!

9. Good fortune draws a high in helpful time of need, To him who, schooled in virtue, guards his soul from greed.

10. From thoughtless lust of other's goods springs fatal ill, Greatness of soul that covets not shall triumph still.

# 18. வெஃகாமை

நடுவுஇன்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும். 171

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். 172

சிற்றின்பம் வெஃகி அறன்அல்ல செய்யாரே
மற்றுஇன்பம் வேண்டு பவர். 173

இலம்என்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். 174

அஃகி அகன்ற அறிவுஎன்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். 175

அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும். 176

வேண்டற்க வெஃகிஆம் ஆக்கம் விளைவயின்
மாண்டற்கு அரிதாம் பயன். 177

அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். 178

அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந்து ஆங்கே திரு. 179

இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு. 180

## 19. Not Backbiting

1. Though virtuous words his lips speak not, and all his deeds are ill. If neighbour he defame not, there's good within him still.

2. Than he who virtue scorns, and evil deeds performs, more vile, Is he that slanders friend, then meets him with false smile.

3. 'Tis greater gain of virtuous good for man to die, Than live to slander absent friend, and falsely praise, when nigh.

4. In presence though unkindly words you speak, say not In absence words those ill result exceeds your thought.

5. The slanderous meanness that an absent friend defames, 'This man in words owns virtue, not in heart,' proclaims.

6. Who on his neighbours' sins delights to dwell, The story of his sins, culled out with care, the world will tell.

7. With friendly art who know not pleasant words to say, Speak words that sever hearts, and drive choice friends away.

8. Whose nature bids them faults of closest friends proclaim, What mercy will they show to other men's good name?

9. 'Tis charity, I ween, that makes the earth sustain their load. Who, neighbours' absence watching, tales or slander tell abroad.

10. If each his own, as neighbours' faults would scan, Could any evil hap to living man?

# 19. புறங்கூறாமை

அறம்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறம்கூறான் என்றல் இனிது. 181

அறன்அழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறன்அழீஇப் பொய்த்து நகை. 182

புறங்கூறிப் பொய்த்துஉயிர் வாழ்தலின் சாதல்
அறம்கூறும் ஆக்கம் தரும். 183

கண்ணின்று கண்அறச் சொல்லினும் சொல்லற்க
முன்னின்று பின்நோக்காச் சொல். 184

அறம்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறம்சொல்லும்
புன்மையால் காணப் படும். 185

பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும். 186

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர். 187

துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு. 188

அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை. 189

ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுஉண்டோ மன்னும் உயிர்க்கு. 190

## 20. Not Speaking Profitless Words

1. Words without sense, while chafe the wise, Who babbles him will all despise.
2. Words without sense, where many wise men hear, to pour, Than deeds to friends ungracious done offendeth more.
3. Diffusive speech of useless words proclaims, A man who never righteous wisdom gains.
4. Unmeaning, worthless words, said to the multitude, To none delight afford, and sever men from good.
5. Gone are both fame and boasted excellence, When men of worth speak of words devoid of sense.
6. Who makes display of idle words' inanity, Call him not man, - chaff of humanity!
7. Let those who list speak things that no delight afford, 'Tis good for men of worth to speak no idle word.
8. The wise who weigh the worth of every utterance, Speak none but words of deep significance.
9. The men of vision pure, from wildering folly free, Not e'en in thoughtless hour, speak words of vanity.
10. If speak you will, speak words that fruit afford, If speak you will, speak never fruitless word.

# 20. பயன்இல சொல்லாமை

பல்லார் முனியப் பயன்இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும். 191

பயன்இல பல்லார்முன் சொல்லல் நயன்இல
நட்டார்கண் செய்தலின் தீது. 192

நயன்இலன் என்பது சொல்லும் பயன்இல
பாரித்து உரைக்கும் உரை. 193

நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லா ரகத்து. 194

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன்இல
நீர்மை உடையார் சொலின். 195

பயன்இல்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல். 196

நயன்இல சொல்லினும் சொல்லுக சான்றோர்
பயன்இல சொல்லாமை நன்று. 197

அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல். 198

பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர். 199

சொல்லுக சொல்லின் பயனுடைய சொல்லற்க
சொல்லின் பயனிலாச் சொல். 200

# 21. Dread of Evil Deed

1. With sinful act men cease to feel the dread of ill within, The excellent will dread the wanton pride of cherished sin.

2. Since evils new from evils ever grow, Evil than fire works out more dreaded woe.

3. Even to those that hate make no return of ill; So shalt thou wisdom's highest law, 'tis said, fulfil.

4. Though good thy soul forget, plot not thy neighbour's fall, Thy plans shall 'virtue's power' by ruin to thyself forestall.

5. Make not thy poverty a plea for ill; Thy evil deeds will make thee poorer still.

6. What ranks as evil spare to do, if thou wouldst shun, Affliction sore through ill to thee by others done.

7. From every enmity incurred there is to 'scape, a way; The wrath of evil deeds will dog men's steps, and slay.

8. Man's shadow dogs his steps where'er he wends; Destruction thus on sinful deeds attends.

9. Beware, if to thyself thyself is dear, Lest thou to aught that ranks as ill draw near!

10. The man, to devious way of sin that never turned aside, From ruin rests secure, whatever ills betide.

## 21. தீவினை அச்சம்

தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு. 201

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். 202

அறிவினுள் எல்லாம் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல். 203

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு. 204

இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்
இலன்ஆகும் மற்றும் பெயர்த்து. 205

தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான். 206

எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென்று அடும். 207

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடிஉறைந் தற்று. 208

தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால். 209

அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின். 210

## 22. The Knowledge of what is Befitting a Man's Positio 1

1. Duty demands no recompose; to clouds of heaven, By men of earth, what answering gift is given?

2. The worthy say, when wealth rewards their toil-spent hours, For uses of beneficence alone 'tis ours.

3. To 'due beneficence' no equal good we know, Amid the happy Gods, or in this world below.

4. Who knows what's human life's befitting grace, He lives; the rest amongst dead men have their place.

5. The wealth of men who love the 'fitting way,' the truly wise, Is as when water fills the lake that village needs supplies.

6. A tree that fruits in th' hamlet's central mart, Is wealth that falls to men of liberal heart.

7. Unfailing tree that healing balm distils from every part, Is ample wealth that falls to him of large and noble heart.

8. E'en when resources fail, they weary not of 'kindness due,' - They to whom Duty's self appears in vision true.

9. The kindly-hearted man is poor in this alone, When power of doing deeds of goodness he finds none.

10. Though by 'beneficence,' the loss of all should come. 'Twere meet man sold himself, and bought it with the sum.

# 22. ஒப்புரவு அறிதல்

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஆற்றும் கொல்லோ உலகு. 211

தாளாற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தல் பொருட்டு. 212

புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே
ஒப்புரவின் நல்ல பிற. 213

ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். 214

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. 215

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன்உடை யான்கண் படின். 216

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். 217

இடன்இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடன்அறி காட்சி யவர். 218

நயன்உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர
செய்யாது அமைகலா வாறு. 219

ஒப்புரவி னால்வரும் கேடுஎனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்கது உடைத்து. 220

## 23. Giving

1. Call that a gift to needy men thou dost dispense, All else is void of good, seeking for recompense.

2. Though men declare it heavenward path, yet to receive is ill; Though upper heaven were not, to give is virtue still.

3. 'I've nought' it ne'er the high-born man's reply; He gives to those who raise themselves that cry.

4. The suppliants' cry for aid yields scant delight, Until you see his face with grateful gladness bright.

5. Mid devotees they're great who hunger's pangs sustain who hunger's pangs relieve a higher merit gain.

6. Let man relieve the wasting hunger men endure; For treasure gained thus finds he treasure-house secure.

7. Whose soul delights with hungry men to share his meal, The hand of hunger's sickness sore shall never feel.

8. Delight of glad'ning human hearts with gifts do they not know. Men of unpitying eye, who hoard their wealth and lose it so?

9. They keep their garners full, for self alone board they spread; - 'Tis greater pain, be sure, than begging daily bread!

10. 'Tis bitter pain to die, 'Tis worse to live, For him who nothing finds to give!

## 23. ஈகை

வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீரது உடைத்து. 221

நல்ஆறு எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்எனினும் ஈதலே நன்று. 222

இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன்உடையான் கண்ணே உள. 223

இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகம் காணும் அளவு. 224

ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின். 225

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதுஒருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. 226

பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது. 227

ஈத்துஉவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை
வைத்துஇழக்கும் வன்க ணவர். 228

இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல். 229

சாதலின் இன்னாதது இல்லை இனிதுஅதூஉம்
ஈதல் இயையாக் கடை. 230

## 24. Renown

1. See that thy life the praise of generous gifts obtain; Save this for living man exists no real gain.

2. The speech of all that speak agrees to crown, The men that give to those that ask, with fair renown.

3. Save praise alone that soars on high, Nought lives on earth that shall not die.

4. If men do virtuous deeds by world-wide ample glory crowned, The heavens will cease to laud the sage for other gifts renowned.

5. Loss that is gain, and death of life's true bliss fulfilled, Are fruits which only wisdom rare can yield.

6. If man you walk the stage, appear adorned with glory's grace; Save glorious you can shine, 'twere better hide your face.

7. If you your days will spend devoid of goodly fame, when men despise, why blame them? You've yourself to blame.

8. Fame is virtue's child, they say; If, then, You childless live, you live the scorn of men.

9. The blameless fruits of fields' increase will dwindle down, If earth the burthen bear of men without renown.

10. Who live without reproach, them living men we deem; Who live without renown, live not, though living men they seem.

## 24. புகழ்

ஈதல் இசைபட வாழ்தல் அதுஅல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு. 231

உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்குஒன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ். 232

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதுஒன்று இல். 233

நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு. 234

நத்தம்போல் கேடும் உளதுஆகும் சாக்காடும்
வித்தகர்க்கு அல்லால் அரிது. 235

தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று. 236

புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன். 237

வசைஎன்ப வையத்தார்க்கு எல்லாம் இசைஎன்னும்
எச்சம் பெறாஅ விடின். 238

வசைஇலா வண்பயன் குன்றும் இசைஇலா
யாக்கை பொறுத்த நிலம். 239

வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசைஒழிய
வாழ்வாரே வாழா தவர். 240

## 25. The Possession of Benevolence

1. Wealth 'mid wealth is wealth of 'kindliness'; Wealth of goods the vilest too possess.

2. The law of 'grace' fulfil, by methods good due trial made, Though many systems you explore, this is your only aid.

3. They in whose breast a 'gracious kindliness' resides, See not the gruesome world, where darkness dear abides.

4. Who for undying souls of men provides with gracious zeal, In his own soul the dreaded guilt of sin shall never feel.

5. The teeming earth's vast realm, round which the wild winds blow, Is witness, men of 'grace' no woeful want shall know.

6. Gain of true wealth oblivious they eschew, Who 'grace' forsake, and graceless actions do.

7. As to impoverished men this present world is not; The 'graceless' in your world have neither part nor lot.

8. Who lose the flower of wealth, when seasons change, again may bloom; Who lose 'benevolence', lose all; nothing can change their doom.

9. When souls unwise true wisdom's mystic vision see, The 'graceless' man may work true works of charity.

10. When weaker men you front with threat'ning brow, Think how you felt in presence of some stronger foe.

## 25. அருள் உடைமை

அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள. 241

நல்லாற்றால் நாடி அருளாள்க பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை. 242

அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல். 243

மன்னுயிர் ஓம்பி அருள்ஆள்வாற்கு இல்லென்ப
தன்உயிர் அஞ்சும் வினை. 244

அல்லல் அருள்ஆள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
அல்லல்மா ஞாலம் கரி. 245

பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்துஒழுகு வார். 246

அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. 247

பொருள்அற்றார் பூப்பர் ஒருகால் அருள்அற்றார்
அற்றார்மற்று ஆதல் அரிது. 248

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம். 249

வலியார்முன் தன்னை நினைக்க தான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து. 250

# 53. சுற்றம் தழால்

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள. 521

விருப்புஅறாச் சுற்றம் இயையின் அருப்புஅறா
ஆக்கம் பலவும் தரும். 522

அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடுஇன்றி நீர்நிறைந் தற்று. 523

சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வம்தான்
பெற்றத்தால் பெற்ற பயன். 524

கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப் படும். 525

பெரும்கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குஉடையார் மாநிலத்து இல். 526

காக்கை கரவா கரைந்துஉண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள. 527

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர். 528

தமராகித் தன்துறந்தார் சுற்றம் அமராமைக்
காரணம் இன்றி வரும். 529

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்துஇருந்து எண்ணிக் கொளல். 530

# 54. Unforgetfulness

1. 'Tis greater ill, if rapture of o'erweening gladness to the soul, Bring self-forgetfulness than if transcendent wrath control.
2. Perpetual, poverty is death to wisdom of the wise; When man forgets himself glory dies!
3. 'To self-oblivious men no praise'; this rule, Decisive wisdom sums of every school.
4. 'To cowards is no fort's defence'; e'en so, The self-oblivious men no blessing know.
5. To him who nought foresees, recks not of anything, The after woe shall sure repentance bring.
6. Towards all unswerving, ever watchfulness of soul retain, Where this is found there is no greater gain.
7. Though things are arduous deemed, there's nought may not be won, When work with mind's unslumbering energy and thought is done.
8. Let things that merit praise thy watchful soul employ; Who these despise attain through sevenfold births no joy.
9. Think on the men whom scornful mind hath brought to nought, When exultation overwhelms thy wildered thought.
10. 'Tis easy what thou hast in mind to gain, If what thou last in mind thy mind retain.

## 54. பொச்சாவாமை

இறந்த வெகுளியின் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியின் சோர்வு. 531

பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. 532

பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அதுஉலகத்து
எப்பால்நூ லோர்க்கும் துணிவு. 533

அச்ச முடையார்க்கு அரண்இல்லை ஆங்கில்லை
பொச்சாப்பு உடையார்க்கு நன்கு. 534

முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை
பின்ஊறு இரங்கி விடும். 535

இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயின் அதுஒப்பது இல். 536

அரியஎன்று ஆகாத இல்லைபொச் சாவாக்
கருவியால் போற்றிச் செயின். 537

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல். 538

இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. 539

உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றும்தான்
உள்ளியது உள்ளப் பெறின். 540

## 55. The Right Sceptre

1. Search out, to no one favour show; with heart that justice loves, Consult, then act; this is the rule that right approves.

2. All earth looks up to heav'n whence raindrops fall; All subjects look to king that ruleth all.

3. Learning and virtue of the sages spring, From all-controlling sceptre of the king.

4. Whose heart embraces subjects all, lord over mighty land, Who rules, the world his feet embracing stands.

5. Where king, who righteous laws regards, the sceptre wields, There fall the showers, there rich abundance crowns the fields.

6. Not lance gives kings the victory, But sceptre swayed with equity.

7. The king all the whole realm of earth protects; And justice guards the king who right respects.

8. Hard of access, nought searching out, with partial hand, The king who rules, shall sink and perish from the land.

9. Abroad to guard, at home to punish, brings no just reproach; 'tis work assigned to kings.

10. By punishment of death the cruel to restrain, Is as when farmer frees from weeds the tender grain.

## 55. செங்கோன்மை

ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை. 541

வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி. 542

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல். 543

குடிதழீஇக் கோல்ஓச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. 544

இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு. 545

வேல்அன்று வென்றி தருவது மன்னவன்
கோல்அதூஉம் கோடாது எனின். 546

இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். 547

எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும். 548

குடிபுறங் காத்துஓம்பிக் குற்றம் கடிதல்
வடுஅன்று வேந்தன் தொழில். 549

கொலையிற் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். 550

# 56. The Cruel Sceptre

1. Than one who plies the murderer's trade, more cruel is the king, Who all injustice works, his subjects harassing.

2. As 'Give' the robber cries with lance uplift, So kings with sceptred hand implore a gift.

3. Who makes no daily search for wrongs, nor justly rules, that king Doth day by day his realm to ruin bring.

4. Whose rod from right deflects, who counsel doth refuse, At once his wealth and people utterly shall lose.

5. His people's tears of sorrow past endurance, are not they sharp instruments to wear the monarch's wealth away?

6. To rulers' rule stability is sceptre right; When this is not, quenched is the rulers' light.

7. As lack of rain to thirsty lands beneath, Is lack of grace in kings to all that breathe.

8. To poverty it adds a sharper sting, To live beneath the sway of unjust king.

9. Where king from right deflecting, makes unrighteous gain, The seasons change, the clouds pour down no rain.

10. Where guardian guardeth not, udder of kine grows dry, And Brahmans' sacred lore will all forgotten lie.

# 56. கொடுங்கோன்மை

கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்கொண்டு
அல்லவை செய்துஒழுகும் வேந்து. 551

வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. 552

நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாள்தொறும் நாடு கெடும். 553

கூழும் குடியும் ஒருங்குஇழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு. 554

அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீர்அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. 555

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதுஇன்றேல்
மன்னாவாம் மன்னர்க்கு ஒளி. 556

துளியின்மை ஞாலத்திற்கு எற்றுஅற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு. 557

இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா
மன்னவன் கோல்கீழ்ப் படின். 558

முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல். 559

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின். 560

## 57. Absence of 'Terrorism'

1. Who punishes, investigation made in due degree, So as to stay advance of crime, a king is he.
2. For length of days with still increasing joys on Heav'n who call, Should raise the rod with brow severe, but let it gently fall.
3. Where subjects dread of cruel wrongs endure, Ruin to unjust king is swift and sure.
4. 'Ah! cruel is our king', where subjects sadly say, His age shall dwindle, swift his joy of life decay.
5. Whom subjects scarce may see, of harsh forbidding countenance; His ample wealth shall waste, blasted by demon's glance.
6. The tyrant, harsh in speech and hard of eye, His ample joy, swift fading, soon shall die.
7. Harsh words and punishments severe beyond the right, Are file that wears away the monarch's conquering might!
8. Who leaves the work to those around, and thinks of it no more; If he in wrathful mood reprove, his prosperous days are o'er!
9. Who builds no fort whence he may foe defy, In time of war shall fear and swiftly die.
10. Tyrants with fools their counsels share: Earth can no heavier burthen bear!

# 57. வெருவந்த செய்யாமை

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து. 561

கடிதுஓச்சி மெல்ல எறிக நெடிதுஆக்கம்
நீங்காமை வேண்டு பவர். 562

வெருவந்த செய்துஒழுகும் வெங்கோலன் ஆயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும். 563

இறைகடியன் என்றுஉரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி ஒல்லைக் கெடும். 564

அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்னது உடைத்து. 565

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடுஇன்றி ஆங்கே கெடும். 566

கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் மரம். 567

இனத்துஆற்றி எண்ணாத வேந்தன் சினத்துஆற்றிச்
சீறின் சிறுகும் திரு. 568

செருவந்த போழ்தில் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். 569

கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது
இல்லை நிலக்குப் பொறை. 570

# 58. Benignity

1. Since true benignity, that grace exceeding great, resides, In kingly soul, world in happy state abides.

2. The world goes on its wonted-way, since grace benign is there; All other men are burthen for the earth to bear.

3. Where not accordant with the song, what use of sounding chords? What gain of eye that no benignant light affords?

4. The seeming eye of face gives no expressive light, when not with duly meted kindness bright.

5. Benignity is eyes' adorning grace; Without it eyes are wounds disfiguring face.

6. Whose eyes 'neath brow infixed diffuse no ray, Of grace; like tree in earth infixed are they.

7. Eyeless are they whose eyes with no benignant lustre shine; Who've eyes can never lack the light of grace benign.

8. Who can benignant smile, yet leave no work undone; By them as very own may all the earth be won.

9. To smile on those that vex, with kindly face, Enduring long, is most excelling grace.

10. They drink with smiling grace, though poison interfused they see, Who seek the praise of all-esteemed courtesy.

# 58. கண்ணோட்டம்

கண்ணோட்டம் என்னும் கழிபெரும் காரிகை
உண்மையான் உண்டுஇவ் வுலகு. 571

கண்ணோட்டத்து உள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை. 572

பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல் கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண். 573

உளபோல் முகத்துஎவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண். 574

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென்று உணரப் படும். 575

மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு
இயைந்துகண் ணோடா தவர். 576

கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்டம் இன்மையும் இல். 577

கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்துஇவ் வுலகு. 578

ஒறுத்துஆற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்
பொறுத்துஆற்றும் பண்பே தலை. 579

பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். 580

# 59. Detectives

1. These two: the code renowned and spies, In these let king confide as eyes.
2. Each day, of every subject every deed, 'Tis duty of the king to learn with speed.
3. By spies who spies, not weighing things they bring, Nothing can victory give to that unwary king.
4. His officers, his friends, his enemies, All these who watch are trusty spies.
5. Of unsuspected mien and all-unfearing eyes, Who let no secret out, are trusty spies.
6. As monk or devotee, through every hindrance making way, A spy, whate'er men do, must watchful mind display.
7. A spy must search each hidden matter out, And full report must render, free from doubt.
8. Spying by spies, the things they tell, To test by others spies is well.
9. One spy must not another see: contrive it so; And things by three confirmed as truth you know.
10. Reward not trusty spy in others' sight, Or all the mystery will come to light.

## 59. ஒற்றாடல்

ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும்
தெற்றென்க மன்னவன் கண். 581

எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில். 582

ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றம் கொளக்கிடந்தது இல். 583

வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று. 584

கடாஅ உருவொடு கண்அஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று. 585

துறந்தார் படிவத்தர் ஆகி இறந்துஆராய்ந்து
என்செயினும் சோர்வுஇலது ஒற்று. 586

மறைந்தவை கேட்கவற்று ஆகி அறிந்தவை
ஐயப்பாடு இல்லதே ஒற்று. 587

ஒற்றுஒற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல். 588

ஒற்றுஒற்று உணராமை ஆள்க உடன்மூவர்
சொல்தொக்க தேறப் படும். 589

சிறப்புஅறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்
புறப்படுத்தான் ஆகும் மறை. 590

## 60. Energy

1. 'Tis energy gives men o'er that they own a true control; They nothing own who own not energy of soul.
2. The wealth of mind man owns a real worth imparts, Material wealth man owns endures not, utterly departs.
3. 'Lost is our wealth,' they utter not this cry distressed, The men of firm concentrated energy of soul possessed.
4. The man of energy of soul inflexible, Good fortune seeks him out and comes a friend to dwell.
5. With rising flood the rising lotus flower its stem unwinds; The dignity of men is measured by their minds.
6. Whate'er you ponder, let your aim be loftly still, Fate cannot hinder always, thwart you as it will.
7. The men of lofty mind quail not in ruin's fateful hour, The elephant retains his dignity mid arrows' deadly shower.
8. The soulless man can never gain, Th'ennobling sense of power with men.
9. Huge bulk of elephant with pointed tusk all armed, When tiger threatens shrinks away alarmed!
10. Firmness of soul in man is real excellence; Others are trees, their human form a mere pretence.

# 60. ஊக்கம் உடைமை

உடையர் எனப்படுவது ஊக்கம்அஃது இல்லார்
உடையது உடையரோ மற்று. 591

உள்ளம் உடைமை உடைமை பொருள்உடைமை
நில்லாது நீங்கி விடும். 592

ஆக்கம் இழந்தேம்என்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார். 593

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையா னுழை. 594

வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத்து அனையது உயர்வு. 595

உள்ளுவது எல்லாம் உயர்வுஉள்ளல் மற்றுஅது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து. 596

சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பின்
பட்டுப்பாடு ஊன்றும் களிறு. 597

உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு. 598

பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின். 599

உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கை அஃது இல்லார்
மரம் மக்கள் ஆதலே வேறு. 600

# 61. Unsluggishness

1. Of household dignity the lustre beaming bright, Flickers and dies when sluggish foulness dims its light.
2. Let indolence, the death of effort, die, If you'd uphold your household's dignity.
3. Who fosters indolence within his breast, the silly elf! The house from which he springs shall perish ere himself.
4. His family decays, and faults unheeded thrive, who, sunk in sloth, for noble objects doth not strive.
5. Delay, oblivion, sloth, and sleep: these four Are, pleasure-boat to bear the doomed to ruin's shore.
6. Though lords of earth unearned possessions gain, The slothful ones no yield of good obtain.
7. Who hug their sloth, nor noble works attempt, Shall bear reproofs and words of just contempt.
8. If sloth a dwelling find mid noble family, Bondsmen to them that hate them shall they be.
9. Who changes slothful habits saves, Himself from all that household rule depraves.
10. The king whose life from sluggishness is rid, Shall rule o'er all by foot of mighty god best rid.

## 61. மடி இன்மை

குடிஎன்னும் குன்றா விளக்கம் மடிஎன்னும்
மாசூர மாய்ந்து கெடும். 601

மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். 602

மடிமடிக் கொண்டுஒழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினும் முந்து. 603

குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு. 604

நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன். 605

படியுடையார் பற்றுஅமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பயன் எய்தல் அரிது. 606

இடிபுரிந்து எள்ளும்சொல் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர். 607

மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும். 608

குடிஆண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்
மடிஆண்மை மாற்றக் கெடும். 609

மடிஇலா மன்னவன் எய்தும் அடிஅளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு. 610

## 62. Manly Effort

1. Say not, 'Tis hard', in weak, desponding hour, For strenuous effort gives prevailing power.

2. In action be thou, 'ware of act's defeat; The world leaves those who work leave incomplete!

3. In strenous effort doth reside, The power of helping others: noble pride!

4. Beneficent intent in men by whom no strenous work is wrought, Like battle-axe in sexless being's hand availeth nought.

5. Whose heart delighteth not in pleasure, but in action finds delight, He wipes away his kinsmen's grief and stands the pillar of their might.

6. Effort brings fortune's sure increase, Its absence brings to nothingness.

7. In sluggishness is seen misfortune's lurid form, the wise declare; Where man unslothful toils, she of the lotus flower is there!

8. 'Tis no reproach unpropitious fate should ban; But not to do man's work is foul disgrace to man.

9. Though fate - divine should make your labour vain; Efforts its labour's sure reward will gain.

10. Who strive with undismayed, unfaltering mind, At length shall leave opposing fate behind.

# 62. ஆள்வினை உடைமை

அருமை உடைத்துஎன்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். 611

வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு. 612

தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு. 613

தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாள்ஆண்மை போலக் கெடும். 614

இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்துஊன்றும் தூண். 615

முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 616

மடிஉளாள் மாமுகடி என்ப மடிஇலான்
தாள்உளாள் தாமரையி னாள். 617

பொறிஇன்மை யார்க்கும் பழிஅன்று அறிவுஅறிந்து
ஆள்வினை இன்மை பழி. 618

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 619

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவுஇன்றித்
தாழாது உஞற்று பவர். 620

## 63. Hopefulness in Trouble

1. Smile, with patient, hopeful heart, in troublous hour; Meet and so vanquish grief; nothing hath equal power.
2. Though sorrow, like a flood, comes rolling on, When wise men's mind regards it, - it is gone.
3. Who griefs confront with meek, ungrieving heart, From them griefs, put to grief, depart.
4. Like bullock struggle on through each obstructed way; From such an one will troubles, troubled, roll away.
5. When griefs press on, but fail to crush the patient heart, Then griefs defeated, put to grief, depart.
6. Who boasted not of wealth, nor gave it all their heart, Will not bemoan the loss, when prosperous days depart.
7. 'Man's frame is sorrow's target', the noble mind reflects, Nor meets with troubled mind the sorrows it expects.
8. He seeks not joy, to sorrow man is born, he knows; Such man will walk unharmed by touch of human woes.
9. Mid joys he yields not heart to joy's control. Mid sorrows, sorrow cannot touch his soul.
10. Who pain as pleasure takes, he shall acquire, The bliss to which his foes in vain aspire.

# 63. இடுக்கண் அழியாமை

இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அஃதுஒப்பது இல். 621

வெள்ளத்து அனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும். 622

இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர். 623

மடுத்தவாய் எல்லாம் பகடுஅன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து. 624

அடுக்கி வரினும் அழிவுஇலான் உற்ற
இடுக்கண் இடுக்கண் படும். 625

அற்றேம்என்று அல்லல் படுபவோ பெற்றேம்என்று
ஓம்புதல் தேற்றா தவர். 626

இலக்கம் உடம்புஇடும்பைக்கு என்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம் மேல். 627

இன்பம் விழையான் இடும்பை இயல்புஎன்பான்
துன்பம் உறுதல் இலன். 628

இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன். 629

இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்
ஒன்னார் விழையும் சிறப்பு. 630

# 64. The Office of Minister of state

1. A minister if he who grasps, with wisdom large, Means, time, work's mode, and functions rare he must discharge.
2. A minister must greatness own of guardian power, determined mind, Learn'd wisdom, manly effort with the former five combined.
3. A minister is he whose power can foes divide, Attach more firmly friends, of severed ones can heal the breaches wide.
4. A minister has power to see the methods help afford, To ponder long, then utter calm conclusive world.
5. The man who virtue knows, has use of wise and pleasant words. With plans for every season apt, in counsel aid affords.
6. When native subtility combines with sound scholastic lore, 'Tis subtility surpassing all, which nothing stands before.
7. Though knowing all that books can teach, 'tis truest tact, To follow common sense of men in act.
8. 'Tis duty of the man in place aloud to say, The very truth, though unwise king may cast his words away.
9. A minister who by king's side plots evil things, Worse woes than countless foemen brings.
10. For gain of end desired just counsel nought avails, To minister, when tact in execution fails.

# 64. அமைச்சு

கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு. 631

வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு. 632

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு. 633

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு. 634

அறன்அறிந்து ஆன்றுஅமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்
திறன்அறிந்தான் தேர்ச்சித் துணை. 635

மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாஉள முன்நிற் பவை. 636

செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல். 637

அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழைஇருந்தான் கூறல் கடன். 638

பழுதுஎண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும். 639

முறைப்படச் சூழ்ந்தும் முடிவுஇலவே செய்வார்
திறப்பாடு இலாஅ தவர். 640

## 65. Power in Speech

1. A tongue that rightly speaks the right is greatest gain, It stands alone midst goodly things that men obtain.

2. Since gain and loss in life on speech depend, From careless slip in speech thyself defend.

3. 'Tis speech that spell-bound holds the listening ear, While those who have not heard desire to hear.

4. Speak words adapted well to various hearers' state; No higher virtue lives, no gain more surely great.

5. Speak out your speech, when once its past dispute, That none can utter speech that shall your speech refute.

6. Charming each hearer's ear, of others' words to seize the sense, Is method wise of men of spotless excellence.

7. Mighty in word, of unforgetful mind, of fearless speech, 'Tis hard for hostile power such man to overreach.

8. Swiftly the listening world will gather round, When men of mighty speech the weighty theme propound.

9. Who have not skill ten faultless words to utter plain, Their tongues will itch with thousand words man's ears to pain.

10. Like scentless flower in blooming garland bound, Are men who can't their lore acquired to other's ears expound.

## 65. சொல்வன்மை

நாநலம் என்னும் நலன்உடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று. 641

ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்துஓம்பல் சொல்லின்கண் சோர்வு. 642

கேட்டார்ப் பிணிக்கும் தகைஅவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல். 643

திறன்அறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனின்ஊஉங்கு இல். 644

சொல்லுக சொல்லைப் பிறிதுஓர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து. 645

வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்
மாட்சியின் மாசுஅற்றார் கோள். 646

சொலல்வல்லன் சோர்வுஇலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது. 647

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்துஇனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். 648

பலசொல்லக் காமுறுவர் மன்றமாசு அற்ற
சிலசொல்லல் தேற்றா தவர். 649

இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர் கற்றது
உணர விரித்துஉரையா தார். 650

## 66. Purity in Action

1. The good external help confers is wordly gain; By action good men every neded gift obtain.

2. From action evermore thyself restrain, Of glory and good that yields no gain.

3. Who tell themselves that nobler things shall yet be won, All deeds that dim the light of glory must they shun.

4. Though troubles press, no shameful deed they do, Whose eyes the ever-during vision view.

5. Do nought that soul repenting must deplore, If thou hast sinned, 'tis well if thou dost sin no more.

6. Though her that bore thee hung'ring thou behold, no deed, Do thou, that men of perfect soul have crime decreed.

7. Than store of wealth guilt-laden souls obtain, The sorest poverty of perfect soul is richer gain.

8. To those who hate reproof and do forbidden thing. What prospers now, in after days shall anguish bring.

9. What's gained through tears with tears shall go; From loss good deeds entail harvests of blessings grow.

10. In pot of clay unburnt he water pours and would retain, Who seeks by wrong the realm in wealth and safety to maintain.

# 66. வினைத்தூய்மை

துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும். 651

என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. 652

ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர். 653

இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். 654

எற்றுஎன்று இரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று. 655

ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. 656

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை. 657

கடிந்த கடிந்துஒரார் செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும். 658

அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை. 659

சலத்தால் பொருள்செய்துஏம் ஆர்த்தல் பசுமண்
கலத்துள்நீர் பெய்துஇரீஇ யற்று. 660

## 67. Power in Action

1. What men call 'power in action' know for 'power of mind' Extern to man all other aids you find.
2. 'Each hindrance shun', unyielding onward press, if obstacle be there, 'These two define your way, so those that search out truth declare.
3. Man's fitting work is known but by success achieved; In midst the plan revealed brings ruin ne'er to be retrieved.
4. Easy to every man the speech that shows the way; Hard thing to shape one's life by words they say!
5. The power in act of men renowned and great, With king acceptance finds and fame through all the state.
6. Whate'er men think, ev'n as they think, may men obtain, if those who think can steadfastness of will retain.
7. Despise not men of modest bearing; Look not at form, but what men are: For some there live, high functions sharing, Like linch-pin of the mighty car!
8. What clearly eye discerns as right, with steadfast will, And mind unslumbering, that should man fulfil
9. Though toil and trouble face thee, firm resolve hold fast, And do the deeds that pleasure yield at last.
10. The world desires not men of every power possessed, Who power in act desire not, - crown of all the rest.

## 67. வினைத்திட்பம்

வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற. 661

ஊறுஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறுஎன்பர் ஆய்ந்தவர் கோள். 662

கடைக்கொட்கச் செய்தக்கது ஆண்மை இடைக்கொட்கின்
எற்றா விழுமம் தரும். 663

சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணஞ் செயல். 664

வீறுஎய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறுஎய்தி உள்ளப் படும். 665

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின். 666

உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சுஆணி அன்னார் உடைத்து. 667

கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
தூக்கம் கடிந்து செயல். 668

துன்பம் உறவரினும் செய்க துணிவுஆற்றி
இன்பம் பயக்கும் வினை. 669

எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு. 670

## 68. The Method of Acting

1. Resolve is counsel's end, If resolutions halt, In weak delays, still unfulfilled, 'tis grievous fault.

2. Slumber when sleeply work's in hand: beware, Thou slumber not when action calls for sleepless care!

3. When way is clear, prompt let your action be; When not, watch till some open path you see.

4. With work or foe, When you neglect some little thing, If you reflect, like smouldering fire, 'twill ruin bring.

5. Treasure and instrument and time and deed and place of act: These five, till every doubt remove, think o'er with care exact.

6. Accomplishment, the hindrances, large profits won, By effort: these compare, - then let the work be done.

7. Who would succeed must thus begin: first let him ask, The thoughts of them who thoroughly know the task.

8. By one thing done you reach a second work's accomplishment; So furious elephant to snare its fellow brute is sent.

9. Than kindly acts to friends more urgent thing to do, Is making foes to cling as friends attached to you.

10. The men of lesser realm, fearing the people's inward dread, Acceptings granted terms, to mightier ruler bow the head.

# ௬௮. வினை செயல் வகை

சூழ்ச்சி முடிவு துணிவுஎய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது. 671

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. 672

ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல். 673

வினைபகை என்றுஇரண்டின் எச்சம் நினையுங்கால்
தீஎச்சம் போலத் தெறும். 674

பொருள்கருவி காலம் வினைஇடனொடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல். 675

முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். 676

செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை
உள்ளறிவான் உள்ளம் கொளல். 677

வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று. 678

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல். 679

உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்
கொள்வர் பெரியார்ப் பணிந்து. 680

# 69. The Envoy

1. Benevolence high birth, the courtesy kings love:- These qualities the envoy of a king approve.

2. Love, knowledge, power of chosen words, three things, Should he possess who speaks the words of kings.

3. Mighty in lore amongst the learned must he be, Midst Jav'lin - bearing kings who speaks the words of victory.

4. Sense, goodly grace, and knowledge exquisite. Who hath these three for envoy's task is fit.

5. In terms concise, avoiding wrathful speech, who utters pleasant word, An envoy he who gains advantage for his lord.

6. An envoy meet is he, well-learned, of fearless eye, Who speaks right home, prepared for each emergency.

7. He is the best who knows what's due, the time considered well, The place selects, then ponders long ere he his errand tell.

8. Integrity, resources, soul determined, truthfulness. Who rightly speaks his message must these marks possess.

9. His faltering lips must utter no unworthy thing, Who stands, with steady eye, to speak the mandates of his king.

10. Death to the faithful one his embassy man bring; To envoy gains assured advantage for his king.

# 69. தூது

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுஉரைப்பான் பண்பு. 681

அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுஉரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று. 682

நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு. 683

*அறிவுஉரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்*
செறிவுடையான் செல்க வினைக்கு. 684

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது. 685

கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்
தக்கது அறிவதாம் தூது. 686

கடன்அறிந்து காலம் கருதி இடன்அறிந்து
எண்ணி உரைப்பான் தலை. 687

தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. 688

விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். 689

இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு
உறுதி பயப்பதாம் தூது. 690

## 70. Conduct in Presence of the King

1. Who warm them at the fire draw not too near, nor keep too much aloof; Thus let them act who dwell beneath of warlike kings the palace-roof.

2. To those who prize not state that kings are wont to prize, The king himself abundant wealth suppiies.

3. Who would walk warily, let him of greater faults beware; To clear suspicions once aroused is an achievement rare.

4. All whispered words and interchange of smiles repress, In presence of the men who kingly power possess.

5. Seek not, ask not, the secret of the king to hear; But if he lets the matter forth, give ear!

6. Knowing the signs, waiting for fitting time, with courteous care, Things not displeasing, needful things, declare.

7. Speak pleasant things, but never utter idle word; Not though by monarch's ears, with pleasure heard.

8. Say not, 'He's young, my kinsman,' despising thus your king; But reverence the glory kingly state doth bring.

9. 'We've gained his grace, boots nought what graceless acts we do', So deem not sages who the changeless vision view.

10. Who think 'We're ancient friends' and do unseemly things; To these familiarity sure ruin brings.

# 70. மன்னரைச் சேர்ந்து ஒழுகல்

அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க்
இகல்வேந்தர்ச் சேர்ந்துஒழுகு வார். 691

மன்னர் விழைய விழையாமை மன்னரால்
மன்னிய ஆக்கம் தரும். 692

போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது. 693

செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்துஒழுகல்
ஆன்ற பெரியா ரகத்து. 694

எப்பொருளும் ஓரார் தொடரார்மற்று அப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை. 695

குறிப்புஅறிந்து காலம் கருதி வெறுப்புஇல
வேண்டுப வேட்பச் சொலல். 696

வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்
கேட்பினும் சொல்லா விடல். 697

இளையர் இனமுறையர் என்றுஇகழார் நின்ற
ஒளியோடு ஒழுகப் படும். 698

கொளப்பட்டேம் என்றுஎண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்குற்ற காட்சி யவர். 699

பழையம் எனக்கருதிப் பண்புஅல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும். 700

# 71. The Knowledge of Indications

1. Who knows the sign, and reads unuttered thought, the gem is he, Of earth round traversed by the changeless sea.

2. Undoubting, who the minds of men can scan, As deity regard that gifted man.

3. Who by the sign the signs interprets plain, Give any member up his aid to gain.

4. Who reads what's shown by signs, though words unspoken be, In form may seem as other men, in function nobler far is he.

5. By sign who knows not signs to comprehend, what gain, 'Mid all his members, from his eyes does he obtain?

6. As forms around in crystal mirrored clear we find, The face will show what's throbbing in the mind.

7. Than speaking countenance hath aught more prescient skill? Rejoice or burn with rage, 'tis the first herald still!

8. To see the face is quite enough, in presence brought, When men can look within and know the lurking thought.

9. The eye speaks out the hate or friendly soul of man; To those who know the eye's swift varying moods to scan.

10. The men of keen discerning soul no other test apply (When you their secret ask) than man's revealing eye.

# 71. குறிப்பு அறிதல்

கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக்கு அணி. 701

ஐயப் படாஅது அகத்து உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல். 702

குறிப்பின் குறிப்புஉணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல். 703

குறித்தது கூறாமைக் கொள்வாரோடு ஏனை
உறுப்புஓர் அனையரால் வேறு. 704

குறிப்பின் குறிப்புஉணரா ஆயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண். 705

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். 706

முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும். 707

முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
உற்றது உணர்வார்ப் பெறின். 708

பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின். 709

நுண்ணியம் என்பார் அளக்கும்கோல் காணுங்கால்
கண்அல்லது இல்லை பிற. 710

## 72. The Knowledge of the Council Chamber

1. Men pure in heart, who know of words the varied force, Should to their audience known adapt their well-arranged discourse.

2. Good men to whom the arts of eloquence are known, Should seek occasion meet, and say what well they've made their own.

3. Universed in councils, who essays to speak. Knows not the way of suasive words, and all is weak.

4. Before the bright ones shine as doth the light! Before the dull ones be as purest stucco white!

5. Midst all good things the best is modest grace, That speaks not first before the elders' face.

6. As in the way one tottering falls, is slip before, The men whose minds are filled with varied lore.

7. The learning of the learned sage shines bright, To those whose faultless skill can value it aright.

8. To speak where understanding hearers you obtain, Is sprinkling water on the fields of growing grain!

9. In councils of the good, who speak good things with penetrating power, In councils of the mean, let them say nought, e'en in oblivious hour.

10. Ambrosia in the sewer split, is word, Spoken in presence of the alien herd.

# 72. அவை அறிதல்

அவைஅறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகைஅறிந்த தூய்மை யவர். 711

இடைதெரிந்து நன்குஉணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர். 712

அவைஅறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉம் இல். 713

ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல். 714

நன்றுஎன்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு. 715

ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுஉணர்வார் முன்னர் இழுக்கு. 716

கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லார் அகத்து. 717

உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று. 718

புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார். 719

அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தம்கணத்தார்
அல்லார்முன் கோட்டி கொளல். 720

## 73. Not to dread the Council

1. Men, pure in heart, who know of words the varied force, The mighty council's moods discern, nor fail in their discourse.

2. Who what they've learned, in penetrating words have learned to say, Before the learn'd among the learn'd most learn'd are they.

3. Many encountering death in face of foe will hold their ground; Who speak undaunted in the council hall are rarely found.

4. What you have learned, in penetrating words speak out before, The learn'd; but learn what men more learn'd can teach you more.

5. By rule, to dialectic art your mind apply, That in the council fearless you may make an apt reply.

6. To those who lack the hero's eye what can the sword avail? Or science what, to those before the council keen who quail?

7. As shining sword before the foe which 'sexless being' bears, Is science learned by him the council's face who fears.

8. Though many things they've learned, yet useless are they all, To man who cannot well and strongly speak in council hall.

9. Who, though they've learned, before the council of the good men quake, Than men unlearn'd a lower place must take.

10. Who what they've learned, in penetrating words know not to say, The council fearing, though they live, as dead are they.

# 73. அவை அஞ்சாமை

வகைஅறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகைஅறிந்த தூய்மை யவர். 721

கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார். 722

பகையகத்துச் சாவார் எளியர் அரியர்
அவையகத்து அஞ்சா தவர். 723

கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற
மிக்காருள் மிக்க கொளல். 724

ஆற்றின் அளவுஅறிந்து கற்க அவைஅஞ்சா
மாற்றம் கொடுத்தல் பொருட்டு. 725

வாளொடுஎன் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடுஎன்
நுண்ணவை அஞ்சு பவர்க்கு. 726

பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல். 727

பல்லவை கற்றும் பயம்இலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார். 728

கல்லா தவரின் கடையென்ப கற்றுஅறிந்தும்
நல்லார் அவைஅஞ்சு வார். 729

உளர்எனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார். 730

# 74. The Land

1. Where spreads fertility unfailing, where resides a band, Of virtuous men, and those of ample wealth, call that a 'land'.

2. That is a 'land' which men desire for wealth's abundant share, Yielding rich increase, where calamities are rare.

3. When burthens press, it bears; Yet, With unfailing hand, To king due tribute pays: that is the 'land'.

4. That is a 'land' whose peaceful annals know, Nor famine fierce, nor wasting plague, nor ravage of the foe.

5. From factions free, and desolating civil strife, and band, Of lurking murderers that king afflict, that is the 'land'.

6. Chief of all lands is that, where nought disturbs its peace; Or, if invaders come, still yields its rich increase.

7. Waters from rains and springs, a mountain near, and waters thence; These make a land, with fortress' sure defence.

8. A country's jewels are these five: unfailing health, Fertility, and joy, a sure defence, and wealth.

9. That is a land that yields increase unsought, That is no land whose gifts with toil are bought.

10. Though blest with all these varied gifts' increase, A land gains nought that is not with its king at peace.

## 74. நாடு

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்வுஇலாச்
செல்வரும் சேர்வது நாடு. 731

பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு. 732

பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு
இறைஒருங்கு நேர்வது நாடு. 733

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு. 734

பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்துஅலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு. 735

கேடுஅறியாக் கெட்ட இடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் தலை. 736

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு. 737

பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்குஇவ் வைந்து. 738

நாடுஎன்ப நாடா வளத்தன நாடுஅல்ல
நாட வளம்தரு நாடு. 739

ஆங்குஅமைவு எய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்துஅமை வில்லாத நாடு. 740

## 75. The Fortification

1. A fort is wealth to those who act against their foes; Is wealth to them who, fearing, guard themselves from woes.

2. A fort is that which owns fount of waters crystal clear, An open space, a hill, and shade of beauteous forest near.

3. Height, breadth, strength, difficult access: Science declares a fort must these possess.

4. A fort must need but slight defence, yet ample be, Defying all the foeman's energy.

5. Impregnable, containing ample stores of food, A fort for those within, must be a warlike station good.

6. A fort, with all munitions amply stored, In time of need should good reserves afford.

7. A fort should be impregnable to foes who gird it round, Or aim there darts from far, or mine beneath the ground.

8. Howe'er the circling foe may strive access to win, A fort should give the victory to those who guard within.

9. At outset of the strife a fort should foes dismay; And greatness gain by deeds in every glorious day.

10. Howe'er majestic castled walls may rise, To craven souls no fortress strength supplies.

# 75. அரண்

ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தன்
போற்று பவர்க்கும் பொருள். 741

மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்
காடும் உடையது அரண். 742

உயர்வுஅகலம் திண்மை அருமைஇந் நான்கின்
அமைவுஅரண் என்றுஉரைக்கும் நூல். 743

சிறுகாப்பின் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்கம் அழிப்பது அரண். 744

கொளற்குஅரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்குஎளிதாம் நீரது அரண். 745

எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துஉதவும்
நல்ஆள் உடையது அரண். 746

முற்றியும் முற்றாது எறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற்கு அரியது அரண். 747

முற்றுஆற்றி முற்றி யவரையும் பற்றுஆற்றிப்
பற்றியார் வெல்வது அரண். 748

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறுஎய்தி மாண்டது அரண். 749

எனைமாட்சித்து ஆகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்லது அரண். 750

# 76. Way of Accumulating Wealth

1. Nothing exists save wealth, than can, Change man of nought to worthy man.
2. Those who have nought all will despise; All raise the wealthy to the skies.
3. Wealth, the lamp unfailing, speeds to every land, Dispersing darkness at its lord's command.
4. Their wealth, who blameless means can use aright, Is source of virtue and of choice delight.
5. Wealth gained by loss of love and grace. Let man cast off from his embrace.
6. Wealth that falls to him as heir, wealth from the kingdom's dues, The spoils of slaughtered foes; these are the royal revenues.
7. 'Tis love that kindliness as offspring bears: And wealth as bounteous nurse the infant rears.
8. As one to view the strife of elephants who takes his stand, On hill he's climbed, is he who works with money in his hand.
9. Make money! Foeman's insolence o'ergrown, To lop away no keener steel is known.
10. Who plenteous store of glorious wealth have gained, By them the other two are easily obtained.

# 76. பொருள் செயல்வகை

பொருள்அல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருள்அல்லது இல்லை பொருள். 751

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு. 752

பொருளென்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று. 753

அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து
தீதுஇன்றி வந்த பொருள். 754

அருளொடும் அன்பொடும் வாராப் பொருள்ஆக்கம்
புல்லார் புரள விடல். 755

உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். 756

அருள்என்னும் அன்புஈன் குழவி பொருள்என்னும்
செல்வச் செவிலியால் உண்டு. 757

குன்றுஏறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்துஒன்று
உண்டாகச் செய்வான் வினை. 758

செய்க பொருளை செறுநர் செருக்கறுக்கும்
எஃகுஅதனின் கூரியது இல். 759

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு. 760

# 77. The Excellence of an Army

1. A conquering host, complete in all its limbs, that fears no wound, Mid treasures of the king is chiefest found.

2. In adverse hour, to face undaunted might of conquering foe, In bravery that only veteran host can show.

3. Though, like the sea, the angry mice send forth their battle cry; What then? The dragon breathes upon them, and they die!

4. That is a host, by no defeats, by no desertions shamed, For old hereditary courage famed.

5. That is a 'host' that joins its ranks, and mightily withstands, Though death with sudden wrath should fall upon its bands.

6. Valour with honour, sure advance in glory's path, with confidence; To warlike host these four are sure defence.

7. A valiant army bears the onslaught, onward goes, Well taught with marshalled ranks to meet their coming foes.

8. Though not in war offensive or defensive skilled; An army gains applause when well equipped and drilled.

9. Where weakness, clinging fear and poverty, Are not, the host will gain the victory.

10. Though men abound, all ready for the war; No army is where no fit leaders are.

# 77. படைமாட்சி

உறுப்புஅமைந்து ஊறுஅஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையுள் எல்லாம் தலை. 761

உலைவிடத்து ஊறுஅஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக்கு அல்லால் அரிது. 762

ஒலித்தக்கால் என்ஆம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும். 763

அழிவுஇன்று அறைபோகாது ஆகி வழிவந்த
வன்க ணதுவே படை. 764

கூற்றுஉடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. 765

மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு. 766

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை அறிந்து. 767

அடல்தகையும் ஆற்றலும் இல்எனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும். 768

சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை. 769

நிலைமக்கள் சால உடைத்துஎனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல். 770

# 78. Military Spirit

1. Yet foes? stand not before my lord! for many a one, Who did my lord withstand, now stands in stone!

2. Who aims at elephant, though dart should fail, has greater praise, Than he who woodland hare with winged arrow slays.

3. Fierceness in hour of strife heroic greatness shows; Its edge is kindness to our suffering foes.

4. At elephant he hurls the dart in hand; for weapon pressed, He laughs and plucks the javelin from his wounded breast.

5. To hero fearless must it not defeat appear, if he but wink his eye when foemen hurls his spear.

6. The heroes, counting up their days, set down as vain, Each day when they no glorious wound sustain.

7. Who seek for world - wide fame, regardless of their life, The glorious clasp adorns, sign of heroic strife.

8. Fearless they rush where'er 'the tide of battle rolls'; The king's reproof damps not the ardour of their eager souls.

9. Who says they err, and visits them scorn, Who die and faithful guard the vow they've sworn?

10. If monarch's eyes o'erflow with tears for hero slain, Who would not beg such boon of glorious death to gain?

# 78. படைச்செருக்கு

என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர். 771

கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது. 772

பேராண்மை என்ப தறுகண் ஒன்று உற்றக்கால்
ஊராண்மை மற்றுஅதன் எஃகு. 773

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 774

விழித்தகண் வேல்கொண்டு எறிய அழித்துஇமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு. 775

விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து. 776

சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. 777

உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினும்சீர் குன்றல் இலர். 778

இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர். 779

புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து. 780

# 79. Friendship

1. What so hard for men to gain as friendship true? What so sure defence 'gainst all the foe can do?

2. Friendship with men fulfilled of good waxes like the crescent moon; Friendship with men of foolish mood, Like the full orb, waneth soon.

3. Learned scroll the more you ponder, Sweeter grows the mental food; So the heart by use grows fonder, Bound in friendship with the good.

4. Nor for laughter only friendship all the pleasant day, But for strokes of sharp reproving, when from right you stray.

5. Not association constant, not affection's token bind; 'Tis the unison of feeling friends unites of kindred mind.

6. Not the face's smile of welcome shows the friend sincere, But the heart's rejoicing gladness when the friend is near.

7. Friendship from ruin saves, in way of virtue keeps; In troublous time, it weeps with him who weeps.

8. As hand of him whose vesture slips away, Friendship at once the coming grief will stay.

9. And where is friendship's royal seat? In stable mind, Where friend in every time of need support may find.

10. Mean is the friendship that men blazon forth, 'He's thus to me' and 'such to his my worth'.

## 79. நட்பு

செயற்கு அரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்குஅரிய யாவுள காப்பு. 781

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு. 782

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. 783

நகுதல் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தல் பொருட்டு. 784

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்புஆம் கிழமை தரும். 785

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு. 786

அழிவின் அவைநீக்கி ஆறுஉய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு. 787

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. 788

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை. 789

இனையர் இவர்எமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்என்னும் நட்பு. 790

## 80. Investigation formatting Friendships

1. To make an untried man your friend is ruin sure; For friendship formed unbroken must endure.

2. Alliance with the man you have not proved and proved again, In length of days will give you mortal pain.

3. Temper, descent, defects, associations free, From blame: know these, then let the man be friend to thee.

4. Who, born of noble race, from guilt would shrink with shame, Pay any price so you as friend that man may claim.

5. Make them your chosen friend whose words repentance move, With power prescription's path to show, while evil they reprove.

6. Ruin itself one blessing lends: 'Tis staff that measures out one's friends.

7. 'Tis gain to any man, the sages say, Friendship of fools to put away.

8. Think not the thoughts that dwarf the soul; nor take, For friends the men who friends in time of grief forsake.

9. Of friends deserting us on ruin's brink, 'Tis torture e'en in life's last hour to think.

10. Cling to the friendship of the spotless one's; whate'er you pay. Renounce alliance with the men of evil way.

## 80. நட்பு ஆராய்தல்

நாடாது நட்டலின் கேடுஇல்லை நட்டபின்
வீடுஇல்லை நட்பாள் பவர்க்கு. 791

ஆய்ந்துஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாம் துயரம் தரும். 792

குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்துயாக்க நட்பு. 793

குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு. 794

அழச்சொல்லி அல்லது இடித்து வழக்குஅறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல். 795

கேட்டினும் உண்டுஓர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல். 796

ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல். 797

உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க
அல்லல்கண் ஆற்றுஅறுப்பார் நட்பு. 798

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடும்காலை
உள்ளினும் உள்ளம் சுடும். 799

மருவுக மாசற்றார் கேண்மை ஒன்று ஈத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு. 800

# 81. Familiarity

1. Familiarity is friendship's silent pact, That puts restraint on no familiar act.
2. Familiar freedom friendship's very frame supplies; To be its savour sweet is duty of the wise.
3. When to familiar acts men kind response refuse, What fruit from ancient friendship's use?
4. When friends unbidden do familiar acts with loving heart, Friends take the kindly deed in friendly part.
5. Not folly merely, but familiar carelessness, Esteem it, when your friends cause you distress.
6. Who stand within the bounds quit not, though loss impends, Association with the old familiar friends.
7. True friends, well versed in loving ways, Cease not to love, when friend their love betrays.
8. In strength of friendship rare of friend's disgrace who will not hear, The day his friend offends will day of grace to him appear.
9. Friendship of old and faithful friends, who ne'er forsake, the world commends.
10. Ill -wishers even wish them well, who guard. For ancient friends, their wonted kind regard.

## 81. பழைமை

பழைமை எனப்படுவது யாதுஎனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. 801

நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை மற்றுஅதற்கு
உப்புஆதல் சான்றோர் கடன். 802

பழகிய நட்புஎவன் செய்யும் கெழுதகைமை
செய்தாங்கு அமையாக் கடை. 803

விழைதகையான் வேண்டி இருப்பர் கெழுதகையால்
கேளாது நட்டார் செயின். 804

பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுஉணர்க
நோதக்க நட்டார் செயின். 805

எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு. 806

அழிவந்த செய்யினும் அன்புஅறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர். 807

கேள்இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாள்இழுக்கம் நட்டார் செயின். 808

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும் உலகு. 809

விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பின் தலைப்பிரியா தார். 810

# 82. Evil Friendship

1. Though evil men should all-absorbing friendship show, Their love had better die away than grow.

2. What though you gain or loss friendship of men of alien heart, Who when you thrive are friends, and when you fail depart?

3. These are alike: the friends who ponder friendship's gain Those who accept whate'er you give, and all the plundering train.

4. A steed untrained will leave you in the tug of war; Than friends like that to dwell alone is better far.

5. 'Tis better not to gain than gain the friendship profitless, Of men of little minds, who succour fails when danger press.

6. Better ten million times incur the wise man's hate, Than form with foolish men a friendship intimate.

7. From foes ten million fold a greater good you gain, Than friendship yields that's formed with laughers vain.

8. Those men who make a grievous toil of what they do, On your behalf, their friendship silently eschew.

9. E'en in a dream the intercourse is bitterness, With men whose deeds are other than their words profess.

10. In anywise maintain not intercourse with those, Who in the house are friends, in hall are slandering foes.

# 82. தீ நட்பு

பருகுவார் போலினும் பண்புஇலார் கேண்மை
பெருகலின் குன்றல் இனிது. 811

உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என். 812

உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர். 813

அமரகத்து ஆற்றுஅறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை 814

செய்துஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று. 815

பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுஉடையார்
ஏதின்மை கோடி உறும். 816

நகைவகையர் ஆகிய நட்பின் பகைவரால்
பத்துஅடுத்த கோடி உறும். 817

ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்ஆடார் சோர விடல். 818

கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. 819

எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு. 820

## 83. Unreal Friendship

1. Anvil where thou shalt smitten be, when men occasion find, Is friendship's form without consenting mind.

2. Friendship of those who seem our kin, but are not really kind. Will change from hour to hour like woman's mind.

3. To heartfelt goodness men ignoble hardly may attain, Although abundant stores of goodly lore they gain.

4. 'Tis fitting you should dread dissemblers' guile, Whose hearts are bitter while their faces smile.

5. When minds are not in unison, its never; just, In any words men speak to put your trust.

6. Though many goodly words they speak in friendly tone, The words of foes will speedily be known.

7. To pliant speech from hostile lips give thou no ear; 'Tis pliant bow that show the deadly peril near!

8. In hands that worship weapon ten hidden lies; Such are the tears that fall from foeman's eyes.

9. 'Tis just, when men make much of you, and then despise, To make them smile, and slap in friendship's guise.

10. When time shall come that foes as friends appear, Then thou, to hide a hostile heart, a smiling face may'st wear.

## 83. கூடா நட்பு

சீர்இடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. 821

இனம்போன்று இனம்அல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். 822

பலநல்ல கற்றக் கடைத்தும் மனம்நல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது. 823

முகத்தின் இனிய நகாஅ அகத்துஇன்னா
வஞ்சரை அஞ்சப் படும். 824

மனத்தின் அமையா தவரை எனைத்துஒன்றும்
சொல்லினால் தேறற்பாற்று அன்று. 825

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும். 826

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். 827

தொழுதகை உள்ளும் படைஒடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. 828

மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லல் பாற்று. 829

பகைநட்பாம் காலம் வருங்கால் முகம்நட்டு
அகம்நட்பு ஒரீஇ விடல். 830

# 84. Folly

1. What one thing merits folly's special name. Letting gain go, loss for one's own to claim!
2. 'Mid follies chiefest folly is to fix your love, On deeds which to your station unbefitting prove.
3. Ashamed of nothing, searching nothing out, of loveless heart, Nought cherishing, 'tis thus the fool will play his part.
4. The sacred law he reads and learns, to other men expounds, - Himself obeys not; where can greater fool be found?
5. The fool will merit hell in one brief life on earth, In which he entering sinks through sevenfold round of birth.
6. When fool some task attempts with uninstructed pains, It fails; nor that alone, himself he binds with chains.
7. When fools are blessed with fortune's bounteous store, Their foes feed full, their friends are prey to hunger sore.
8. When folly's hand grasps wealth's increase, 'twill be, As when a mad man raves in drunken glee.
9. Friendship of fools is very pleasant thing, Parting with them will leave behind no sting.
10. Like him who seeks his couch with unwashed feet, Is fool whose foot intrudes where wise men meet.

## 84. பேதைமை

பேதைமை என்பதுஒன்று யாதெனின் ஏதம்கொண்டு
ஊதியம் போக விடல். 831

பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கண் செயல். 832

நாணாமை நாடாமை நார்இன்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். 833

ஓதி உணர்ந்தும் பிறர்க்குஉரைத்தும் தான்அடங்காப்
பேதையின் பேதையார் இல். 834

ஒருமைச் செயல்ஆற்றும் பேதை எழுமையும்
தான்புக்கு அழுந்தும் அளறு. 835

பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேல் கொளின். 836

ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெரும்செல்வம் உற்றக் கடை. 837

மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின். 838

பெரிதுஇனிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதுஒன்று இல். 839

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். 840

# 85. Ignorance

1. Want of knowledge, 'mid all wants the sorest want we deem; Want of other things the world will not as want esteem.

2. The gift of foolish man, with willing heart bestowed, is nought, But blessing by receiver's penance bought.

3. With keener anguish foolish men their own hearts wring, Than aught that even malice of their foes can bring.

4. What is stupidity? The arrogance that cries, 'Behold, we claim the glory of the wise.'

5. If men what they have never learned assume to know, Upon their real learning's power a doubt't will throw.

6. Fools are they who their nakedness conceal, And yet their faults unveiled reveal.

7. From out his soul who lets the mystic teachings die, Entails upon himself abiding misery.

8. Advised, he heeds not; of himself knows nothing wise; This man's whole life is all one plague until he dies.

9. That man is blind to eyes that will not see who knowledge shows;- The blind man still in his blind fashion knows.

10. Who what the world affirms as false proclaims O'er all the earth receive a demon's name.

# 85. புல்லறிவாண்மை

அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதுஇன்மை
இன்மையா வையாது உலகு. 841

அறிவிலான் நெஞ்சுஉவந்து ஈதல் பிறிதுயாதும்
இல்லை பெறுவான் தவம். 842

அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது. 843

வெண்மை எனப்படுவது யாதுஎனின் ஒண்மை
உடையம் யாம் என்னும் செருக்கு. 844

கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடுஅற
வல்லதூஉம் ஐயம் தரும். 845

அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி. 846

அருமறை சோரும் அறிவுஇலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. 847

ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவும்ஓர் நோய். 848

காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டான்ஆம் தான்கண்ட வாறு. 849

உலகத்தார் உண்டுஎன்பது இல்என்பான் வையத்து
அலகையா வைக்கப் படும். 850

# 86. Hostility

1. Hostility disunion's plague will bring, That evil quality, to every living thing.

2. Though men disunion plan, and do thee much despite, 'Tis best no enmity to plan, nor evil deeds requite.

3. If enmity, that grievous plague, you shun, Endless undying praises shall be won.

4. Joy of joys abundant grows, When malice dies that woe of woes.

5. If men from enmity can keep their spirits free, Who over them shall gain the victory?

6. The life of those who cherished enmity hold dear, To grievous fault and utter death is near.

7. The very truth that greatness gives their eyes can never see, Who only know to work men woe, fulfilled of enmity.

8. 'Tis gain to turn the soul from enmity; Ruin reigns where this hath mastery.

9. Men think not hostile thought in fortune's favouring hour, They cherish enmity when in misfortune's power.

10. From enmity do all afflictive evils flow; But friendliness doth wealth of kindly good bestow.

## 86. இகல்

இகல்என்ப எல்லா உயிர்க்கும் பகல்என்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய். 851

பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை 852

இகல்என்னும் எவ்வநோய் நீக்கின் தவல்இல்லாத்
தாவில் விளக்கம் தரும். 853

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல்என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். 854

இகல்எதிர் சாய்ந்துஒழுக வல்லாரை யாரே
மிகல்ஊக்கும் தன்மை யவர். 855

இகலின் மிகல்இனிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து. 856

மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்
இன்னா அறிவி னவர். 857

இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகல்ஊக்கின் ஊக்குமாம் கேடு. 858

இகல்காணான் ஆக்கம் வரும்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு. 859

இகலானாம் இன்னாத எல்லாம் நகலானாம்
நல்நயம் என்னும் செருக்கு. 860

# 87. The might of Hatred

1. With stronger than thyself, turn from the strife away; With weaker shun not, rather court the fray.
2. No kinsman's love, no strength of friends has he; How can he bear his foeman's enmity?
3. A craven thing! knows nought, accords with none, gives nought away; To wrath of any foe he falls an easy prey.
4. His wrath still blazes, every secret told; each day This man's in every place to every foe an easy prey.
5. No way of right he scans, no precepts bing, no crimes affright, No grace of good he owns; such man's his foes' delight.
6. Blind in his rage, his lustful passions rage and swell; If such a man mislikes you, like it well
7. Unseemly are his deeds, yet proffering aid, the man draws nigh: His hate - 'tis cheap at any price - be sure to buy!
8. No gracious gifts he owns, faults many cloud his fame; His foes rejoice, for none with kindred claim.
9. The Joy of victory is never far removed from those Who've luck to meet with ignorant and timid foes.
10. The task of angry war with men unlearned in virtue's lore Who will not meet, glory shall meet him never more.

# 87. பகை மாட்சி

வலியார்க்கு மாறுஏற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை. 861

அன்புஇலன் ஆன்ற துணைஇலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு. 862

அஞ்சும் அறியான் அமைவுஇலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு. 863

நீங்கான் வெகுளி நிறைஇலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது. 864

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்புஇலன் பற்றார்க்கு இனிது. 865

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். 866

கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்துஇருந்து
மாணாத செய்வான் பகை. 867

குணன்இலனாய்க் குற்றம் பலஆயின் மாற்றார்க்கு
இனன்இலன்ஆம் ஏமாப்பு உடைத்து. 868

செறுவார்க்குச் சேண்இகவா இன்பம் அறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின். 869

கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லாது ஒளி. 870

## 88. Knowing the Quality of Hate

1. For Hate, that ill-conditioned thing not e'en in jest. Let any evil longing rule your breast.

2. Although you hate incur of those whose ploughs are bows, Make not the men whose ploughs are words your foes!

3. Than men of men diseased, a wretch more utterly forlorn, Is he who stands alone, object of many foeman's scorn.

4. The world secure on his dexterity depends, Whose worthy rule can change his foes to friends.

5. Without ally, Who fights with twofold enemy o'er matched, Must render one of these a friend attached.

6. Whether you trust or not, in time of sore distress, Questions of diff'rence or agreement cease to press.

7. To those who know them not, complain not of your woes; Nor to your foeman's eyes infirmities disclose.

8. Know thou the way, then do thy part, thyself defend; Thus shall the pride of those that hate thee have an end.

9. Destroy the thorn, while tender point can work thee no offence; Matured by time, 'twill pierce the hand that plucks it thence.

10. But breathe upon them, and they surely die, Who fail to tame the pride of angry enemy.

# 88. பகைத்திறம் தெரிதல்

பகைஎன்னும் பண்பு இலதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற்று அன்று. 871

வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்ஏர் உழவர் பகை. 872

ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். 873

பகைநட்பாக் கொண்டுஒழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு. 874

தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்
இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று. 875

தேறினும் தேறா விடினும் அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல். 876

நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க
மென்மை பகைவர் அகத்து. 877

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு. 878

இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து. 879

உயிர்ப்ப உளர்அல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். 880

## 89. Enmity Within

1. Water and shade, if they unwholesome prove, will bring you pain. And qualities of friends who treacherous act, will be your bane.

2. Dread not the foes that as drawn swords appear; Friendship of foes, who seem like kinsmen, fear!

3. Of hidden hate beware, and guard thy life; In troublous time 'twill deeper wound than potter's knife.

4. If secret enmities arise that minds pervert, Then even kin unkind will work thee grievous hurt.

5. Amid one's relatives if hidden hate arise, 'Twill hurt inflict in deadly wise.

6. If discord finds a place midst those who dwelt at one before, 'Tis ever hard to keep destruction from the door.

7. As casket with its cover, though in one they live alway, No union to the house where hate concealed hath sway.

8. As gold with which the file contends is worn away, So strength of house declines where hate concealed hath sway.

9. Though slight as shred of 'seasame' seed it be, Destruction lurks in hidden enmity.

10. Domestic life with those who don't agree, Is dwelling in a shed with snake for company.

## 89. உட்பகை

நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாஆம் இன்னா செயின். 881

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. 882

உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவுஇடத்து
மட்பகையின் மாணத் தெறும். 883

மனம்மாணா உட்பகை தோன்றின் இனம்மாணா
ஏதம் பலவும் தரும். 884

உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்
ஏதம் பலவும் தரும். 885

ஒன்றாமை ஒன்றியார் கண்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது. 886

செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி. 887

அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி. 888

எள்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு. 889

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடன்உறைந் தற்று. 890

## 90. Nor Offending the Great

1. The chiefest care of those who guard themselves from ill, Is not to slight the powers of those who work their mighty will.

2. If men will lead their lives reckless of great men's will, Such life, through great men's powers, will bring perpetual ill.

3. Who ruin covet let them shut their ears, and do despite To those who, where they list to ruin have the might.

4. When powerless man 'gainst men of power will evil deeds essay, 'Tis beck'ning with the hand for Death to seize them for its prey.

5. Who dare the fiery wrath of monarchs dread, Where'er they flee, are numbered with the dead.

6. Though in the conflagration caught, he may escape from thence: He 'scapes not who in life to great ones gives offence.

7. Though every royal gift, and stores of wealth your life should crown, What are they, if the worthy men or mighty virtue frown?

8. If they, whose virtues like a mountain rise, are light esteemed; They die from earth who, with their households, ever-during seemed.

9. When blazes forth the wrath of men of lofty fame, Kings even fall from high estate and perish in the flame.

10. Though all - surpassing wealth of aid the boast, If men in glorious virtue great are wrath, they're lost.

# 90. பெரியாரைப் பிழையாமை

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை. 891

பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்
பேரா இடும்பை தரும். 892

கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு. 893

கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல். 894

யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெம்துப்பின்
வேந்து செறப்பட் டவர். 895

எரியால் சுடப்படினும் உய்வுஉண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்துஒழுகு வார். 896

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னாம்
தகைமாண்ட தக்கார் செறின். 897

குன்றுஅன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து 898

ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். 899

இறந்துஅமைந்த சார்புடையர் ஆயினும் உய்யார்
சிறந்துஅமைந்த சீரார் செறின். 900

## 91. Being led by Women

1. Who give their soul to love of wife acquire not nobler gain; Who give their soul to strenuous deeds such meaner joys disdain.

2. Who gives himself to love of wife, careless of noble name His wealth will clothe him with o'erwhelming shame.

3. Who to his wife submits, his strange, unmanly mood Will daily bring him shame among the good.

4. No glory crowns e'en manly actions wrought By him who dreads his wife, nor gives the other world a thought.

5. Who quakes before his wife will ever tremble too, Good deeds to men of good deserts to do.

6. Though, like the demi-gods, in bliss they dwell secure from harm, Those have no dignity who fear the housewife's slender arm.

7. The dignity of modest womanhood excels His manliness, obedient to a woman's law who dwells.

8. Who to the will of her with beauteous brow their lives conform, Aid not their friends in need, nor acts of charity perform.

9. No virtuous deed, no seemly wealth, no pleasure, rests With them who live obedient to their wives' behests.

10. Where pleasures of the mind, that dwell in realms of thought, abound, Folly, that springs from overweening woman's love, is never found.

# 91. பெண்வழிச் சேறல்

மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது. 901

பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். 902

இல்லாள்கண் தாழ்ந்த இயல்புஇன்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும். 903

மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறுஎய்தல் இன்று. 904

இல்லாளை அஞ்சுவான் அஞ்சும்மற்று எஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல். 905

இமையாரின் வாழினும் பாடுஇலரே இல்லாள்
அமையார்தோள் அஞ்சு பவர். 906

பெண்ஏவல் செய்துஒழுகும் ஆண்மையின் நாணுடைப்
பெண்ணே பெருமை உடைத்து. 907

நட்டார் குறைமுடியார் நன்றுஆற்றார் நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர். 908

அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ஏவல் செய்வார்கண் இல். 909

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல். 910

## 92. Wanton Women

1. Those that choice armlets wear who seek not thee with love, But seek thy wealth, their pleasant words will ruin prove.

2. Who weigh the gain, and utter virtuous words with vicious heart, Weighing such women's worth, from their society depart.

3. As one in darkened room, some stranger corpse in arms, Is he who seeks delight in mercenary women's charms!

4. Their worthless charms, whose only weal is wealth of gain, From touch of these the wise, who seek the wealth of grace, abstain.

5. From contact with their worthless charms, whose charms to all are free, The men with sense of good and lofty wisdom blest will flee;

6. From touch of those who worthless charms, with wanton arts, display, The men who would their own true good maintain will turn away.

7. Who cherish alien thoughts while folding in their feigned embrace, These none approach save those devoid of virtue's grace.

8. As demoness who lures to ruin woman's treacherous love To men devoid of wisdom's searching power will prove.

9. The wanton's tender arm, with gleaming jewels decked, Is hell, where sink degraded souls of men abject.

10. Women of double minds, strong drink, and dice; to these giv'n o'er, Are those on whom the light of Fortune shines no more.

# 92. வரைவின் மகளிர்

அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும். 911

பயன்தூக்கிப் பண்புஉரைக்கும் பண்பில் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல். 912

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டுஅறையில்
ஏதில் பிணம்தழீஇ யற்று. 913

பொருட்பொருளார் புன்நலம் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவி னவர். 914

பொதுநலத்தார் புன்நலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர். 915

தம்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்நலம் பாரிப்பார் தோள். 916

நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சின்
பேணிப் புணர்பவர் தோள். 917

ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்குஎன்ப
மாய மகளிர் முயக்கு. 918

வரைவுஇலா மாணிழையார் மென்தோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு. 919

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. 920

# 93. Not Drinking Paln - Wine

1. Who love the palm's intoxicating juice, each day, No rev'rence they command, their glory fades away.

2. Drink not inebriating draught. Let him count well the cost. Who drinks, by drinking, all good men's esteem is lost.

3. The drunkard's joy is sorrow to his mother's eyes; What must it be in presence of the truly wise?

4. Shame, goodly main, will turn her back for aye on them Who sin the drunkard's grievous sin, that all condemn.

5. With gift of goods who self-oblivion buys. Is ignorant of all that man should prize.

6. Sleepers are as the dead, no otherwise they seem; Who drink intoxicating draughts, they poison quaff, we deem.

7. Who turn aside to drink, and droop their heavy eye, Shall be their townsmen's jest, When they the fault espy.

8. No more in secret drink, and then deny the hidden fraud; what in thy mind lies hid shall soon be known abroad.

9. Like him who, lamp in hand, would seek one sunk beneath the wave. Is he who strives to sober drunken man with reasonings grave.

10. When one, in sober interval, a drunken man espies, Does he not think, 'Such is my folly in my revelries'?

# 93. கள் உண்ணாமை

உட்கப் படாஅர் ஒளிஇழப்பர் எஞ்ஞான்றும்
கள்காதல் கொண்டுஒழுகு வார். 921

உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார். 922

ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி. 923

நாண்என்னும் நல்லாள் புறம்கொடுக்கும் கள்என்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. 924

கையறி யாமை யுடைத்தே பொருள் கொடுத்து
மெய்அறி யாமை கொளல். 925

துஞ்சினார் செத்தாரின் வேறுஅல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுஉண்பார் கள்உண் பவர். 926

உள்ஒற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ஒற்றிக் கண்சாய் பவர். 927

களித்துஅறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து
ஒளித்ததூஉம் ஆங்கே மிகும். 928

களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று. 929

கள்உண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு. 930

# 94. Gaming (Gambling)

1. Seek not the gamester's play; though you should win, Your gain is as the baited hook the fish takes in.

2. Is there for gamblers, too, that gaining one a hundred lose, some way That they may good obtain, and see a prosperous day?

3. If prince unceasing speak of nought but play, Treasure and revenue will pass from him away.

4. Gaming brings many woes, and ruins fair renown; Nothing to want brings men so surely down.

5. The dice, and gaming - hall, and gamester's art, they eager sought, Thirsting for gain - the men in other days who came to nought.

6. Gambling's Misfortune's other name: o'er whom she casts her veil, They suffer grievous want, and sorrows sore bewail.

7. Ancestral wealth and noble fame to ruin haste, If men in gambler's halls their precious moments waste.

8. Gambling wastes wealth, to falsehood bends the soul: it drives away All grace, and leaves the man to utter misery a prey.

9. Clothes wealth, food, praise, and learning, all depart From him on gambler's gain who sets his heart.

10. How'er he lose, the gambler's heart is ever in the play; E'en so the soul, despite its griefs, would live on earth alway.

# 94. சூது

வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று. 931

ஒன்றுஎய்தி நூறுஇழக்குஞ் சூதர்க்கும் உண்டாம்கொல்
நன்றுஎய்தி வாழ்வதோர் ஆறு. 932

உருள்ஆயம் ஓவாது கூறின் பொருளாயம்
போஒய்ப் புறமே படும். 933

சிறுமை பலசெய்து சீர்அழிக்கும் சூதின்
வறுமை தருவதுஒன்று இல். 934

கவறும் கழகமும் கையும் தருக்கி
இவறியார் இல்லாகி யார். 935

அகடுஆரார் அல்லல் உழப்பர் சூதுஎன்னும்
முகடியால் மூடப்பட் டார். 936

பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின். 937

பொருள்கெடுத்துப் பொய்மேல் கொளீஇ அருள்கெடுத்து
அல்லல் உழப்பிக்கும் சூது. 938

உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின். 939

இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற்று உயிர். 940

## 95. Medicine

1. The learned books count three, with wind as first; of these As any one prevail, or fail; 'twill cause disease.

2. No need of medicine to heal your body's pain, If, what you ate before digested well, you eat again.

3. Who has a body gained may long the gift retain, If food digested well, in measure due he eat again.

4. Knowing the food digested well, when hunger prompteth thee, With constant care, the viands choose that well agree,

5. With self-denial take the well-selected meal; So shall thy frame no sudden sickness feel.

6. On modest temperance as pleasures pure, So pain attends the greedy epicure.

7. Who largely feeds, not measure of the fire within maintains That thoughtless man shall feel unmeasured pains.

8. Disease, its cause, what may abate the ill: Let leech examine these, then use his skill.

9. The habitudes of patient and disease, the crises of the ill These must the learned leech think over well, then use him skill.

10. For patient, leech, and remedies, and him who waits by patient's side, The art of medicine must fourfold code of laws provide.

# 95. மருந்து

மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று. 941

மருந்துஎன வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின். 942

அற்றால் அளவுஅறிந்து உண்க அஃதுஉடம்பு
பெற்றான் நெடிதுஉய்க்கும் ஆறு. 943

அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறுஅல்ல
துய்க்க துவரப் பசித்து. 944

மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துஉண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு. 945

இழிவுஅறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய். 946

தீயளவு அன்றித் தெரியான் பெரிதுஉண்ணின்
நோயளவு இன்றிப் படும். 947

நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். 948

உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல். 949

உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வான்என்று
அப்பால்நாற் கூற்றே மருந்து. 950

# 96. Noblity

1. Save in the scions of a noble house, you never find instinctive sense of right and virtuous shame combined.

2. In these three things the men of noble birth fail not; In virtuous deed and truthful word, and chastened thought.

3. The smile, the gift. the pleasant word, unfailing courtesy These are the signs, they say, of true nobility.

4. Millions on millions piled would never win The men of noble race to soul - degrading sin.

5. Though stores for charity should fail within, the ancient race Will never lose its old ancestral grace.

6. Whose minds are set to live as fits their sire's unspotted fame, Stooping to low deceit, commit no deeds that gender shame.

7. The faults of men of noble race are seen by every eye, As spots on her bright orb that walks sublime the evening sky.

8. If lack of love appear in those who bear some goodly name 'Twill make men doubt the ancestry they claim.

9. Of soil the plants that spring thereout will show the worth: The words they speak declare the men of noble birth.

10. Who seek for good the grace of virtuous shame must know; who seek for noble name to all reverence show.

# 96. குடிமை

இற்பிறந்தார் கண் அல்லது இல்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு. 951

ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். 952

நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு. 953

அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர். 954

வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பில் தலைப்பிரிதல் இன்று. 955

சலம்பற்றிச் சால்புஇல செய்யார்மாசு அற்ற
குலம்பற்றி வாழ்தும்என் பார். 956

குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து. 957

நலத்தின்கண் நார்இன்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும். 958

நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல். 959

நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. 960

# 97. Honour

1. Though linked to splendours man no otherwise may gain, Reject each act that may thine honour's clearness stain.

2. Who seek with glory to combine honour's untarnished fame, Do no inglorious deeds, though men accord them glory's name.

3. Bow down thy soul, with increase blest, in happy hour, Lift up thy heart, when stript of all by fortune's power.

4. Like hairs from off the head that fall to earth, When fall'n from high estate are men of noble birth.

5. If meanness, slight as 'abrus' grain, by men be wrought, Though like a hill their high estate, they sink to nought.

6. It yields no praise, nor to the land of Gods throws wide the gate: Why follow men who scorn, and at their bidding wait?

7. Better 'twere said, 'He's perished!' than to gain The means to live, following in foeman's train.

8. When high estate has lost its pride of honour meet, Is life, that nurses this poor flesh, as nectar sweet?

9. Like the wild ox that, of its tuft bereft, will pine away, Are those who, of their honour shorn, will quit the light of day.

10. Who, when dishonour comes, refuse to live, their honoured memory Will live in worship and applause of all the would for aye!

# 97. மானம்

இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல். 961

சீரினும் சீர்அல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். 962

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு. 963

தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை. 964

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின். 965

புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை. 966

ஒட்டார்பின் சென்றுஒருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று. 967

மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து. 968

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். 969

இளியவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு. 970

## 98. Greatness

1. The light of life is mental energy; disgrace is his Who says, 'I'll lead a happy life devoid of this.'

2. All men that live are one in circumstances of birth; Diversities of works give each his special worth.

3. The men of lofty line, whose souls are mean, are never great The men of lowly birth, when high of soul, are not of low estate.

4. Like single-hearted women, greatness too, Exists while to itself is true.

5. The man endowed with greatness true, Rare deeds in perfect wise will do.

6. 'As, votaries of the truly great we will ourselves enroll, 'Is thought that enters not the mind of men of little soul.

7. Whene'er distinction lights on some unworthy head, Then deeds of haughty insolence are bred.

8. Greatness humbly bends, but littleness always Spread out its plumes, and loads itself with praise.

9. Greatness is absence of conceit; meanness, we deem, Riding on car of vanity supreme.

10. Greatness will hide a neighbour's shame; Meanness his faults to all the world proclaim.

## 98. பெருமை

ஒளியொருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு
அஃதுஇறந்து வாழ்தும் எனல். 971

பிறப்புஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்புஒவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். 972

மேல்இருந்தும் மேல்அல்லார் மேல்அல்லர் கீழ்இருந்தும்
கீழ்அல்லார் கீழ்அல் லவர். 973

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டுஒழுகின் உண்டு. 974

பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல். 975

சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு. 976

இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்பும்தான்
சீரல் லவர்கண் படின். 977

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து. 978

பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல். 979

அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். 980

# 99. Perfectness

1. All goodly things are duties to the men, they say Who set themselves to walk in virtue's perfect way.

2. The good of inward excellence they claim, The perfect men; all other good is only good in name.

3. Love, modesty, beneficence, benignant grace, With truth, are pillars five of perfect virtue's resting-place.

4. The type of 'penitence' is virtuous good that nothing slays; To speak no ill of other men is perfect virtue's praise.

5. Submission is the might of men of mighty acts; the sage With that same weapon stills his foeman's rage.

6. What is perfection's test? The equal mind. To bear repulse from even meaner men resigned.

7. What fruit doth your perfection yield you, say! Unless to men who work you ill good repay?

8. To soul with perfect virtue's strength endued, Brings no disgrace the lack of every earthly good.

9. Call them of perfect virtue's sea the shore, Who, though the fates should fail, fail not for evermore.

10. The mighty earth its burthen to sustain must cease, If perfect virtue of the perfect men decrease.

# 99. சான்றாண்மை

கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. 981

குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத்து உள்ளதூஉம் அன்று. 982

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண். 983

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. 984

ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. 985

சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல். 986

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. 987

இன்மை ஒருவற்கு இளிவுஅன்று சால்புஎன்னும்
திண்மைஉண் டாகப் பெறின். 988

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார். 989

சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலம்தான்
தாங்காது மன்னோ பொறை. 990

# 100. Courtesy

1. Who easy access give to every man, they say, Of kindly courtesy will learn with ease the way.

2. Benevolence and high born dignity, These two are beaten paths of courtesy.

3. Men are not one because their members seem alike to outward view; Similitude of kindred quality makes likeness true.

4. Of men of fruitful life, who kindly benefits dispense, The world unites to praise the 'noble excellence.'

5. Contempt is evil though in sport. They who men's nature know, E' en in their wrath, a courteous mind will show.

6. The world abides; for 'worthy' men its weight sustain. Were it not so, 'twould fall to dust again.

7. Though sharp their wit as file, as blocks they must remain, Whose souls are void of 'courtesy humane.'

8. Though men with all unfriendly acts and wrongs assail, 'Tis uttermost disgrace in 'courtesy' to fail.

9. To him who knows not how to smile in kindly mirths, Darkness in daytime broods o'er all the vast and mighty earth.

10. Like sweet milk soured because in filthy vessel poured, Is ample wealth in churlish man's unopened coffers stored.

# 100. பண்புடைமை

எண்பதத்தால் எய்தல் எளிதுஎன்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு. 991

அன்புஉடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புஉடைமை என்னும் வழக்கு. 992

உறுப்புஒத்தல் மக்கள்ஒப்பு அன்றால் வெறுத்தக்க
பண்புஒத்தல் ஒப்பதாம் ஒப்பு. 993

நயனொடு நன்றி புரிந்த பயன்உடையார்
பண்புபா ராட்டும் உலகு. 994

நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்
பண்புஉள பாடுஅறிவார் மாட்டு. 995

பண்புஉடையார்ப் பட்டுஉண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன். 996

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர். 997

நண்புஆற்றா ராகி நயம்இல செய்வார்க்கும்
பண்புஆற்றார் ஆதல் கடை. 998

நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள். 999

பண்புஇலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலம்தீமை யால்திரிந் தற்று. 1000

## 101. Wealth without Benefaction

1. Who fills his house with ample store, enjoying none, Is dead. Nought with the useless heap is done.

2. Who giving nought, opines from wealth all blessing springs, Degraded birth that doting miser's folly brings.

3. Who lust to heap wealth, but glory hold not dear, It burthens earth when on the stage of being they appear.

4. Whom no one loves, when he shall pass away, What doth he look to leave behind, I pray?

5. Amid accumulated millions they are poor, Who nothing give and nought enjoy of all they store.

6. Their ample wealth is misery to men of churlish heart, Who nought themselves enjoy, and nought to worthy men impart.

7. Like woman fair in lonelihood who aged grows, Is wealth of him on needy men who nought bestows.

8. When he whom no man loves exults in great prosperity, 'Tis as when fruits in midmost of the town some poisonous tree.

9. Who love abandon, self-afflict, and virtue's way forsake To help up glittering wealth, their hoards shall others take.

10. 'Tis as when rain cloud in the heaven grown dry, When generous wealthy man endures brief poverty.

# 101. நன்றியில் செல்வம்

வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுஉண்ணான்
செத்தான் செயக்கிடந்தது இல். 1001

பொருளானாம் எல்லாமென்று ஈயாது இவறும்
மருளானாம் மாணாப் பிறப்பு. 1002

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை. 1003

எச்சமென்று என்எண்ணும் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன். 1004

கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல். 1005

ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்குஒன்று
ஈதல் இயல்பிலா தான். 1006

அற்றார்க்குஒன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று. 1007

நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று. 1008

அன்புஒரீஇத் தன்செற்று அறம்நோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர். 1009

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறம்கூர்ந் தனையது உடைத்து. 1010

## 102. Shame

1. To shrink abashed from evil deed is 'generous shame'; Other is that of bright-browed one of virtuous fame.

2. Food, clothing, and other things alike all beings own; By sense of shame the excellence of men is known.

3. All spirits homes of flesh as habitation claim, And perfect virtue ever dwells with shame.

4. And is not shame an ornament to men of dignity? Without it step of stately pride is piteous thing to see.

5. As home of virtuous shame by all the world the men are known, Who feel ashamed for others, guilt as for their own.

6. Unless the hedge of shame inviolate remain, For men of lofty soul the earth's vast realms no charms retain.

7. The men of modest soul for shame would life an offering make, But ne'er abandon virtuous shame for life's dear sake.

8. Though know'st no shame, while all around asha med must be: Virtue will shrink away ashamed of thee!

9. 'Twill race consume if right observance fail; 'Twill every good consume if shamelessness prevail.

10. 'Tis as with strings a wooden puppet apes life's functions, when Those void of shame within hold intercourse with men.

# 102. நாணுடைமை

கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற. 1011

ஊண்உடை எச்சம் உயிர்க்குஎல்லாம் வேறுஅல்ல
நாண்உடைமை மாந்தர் சிறப்பு. 1012

ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு. 1013

அணிஅன்றோ நாண்உடைமை சான்றோர்க்கு அஃதுஇன்றேல்
பிணிஅன்றோ பீடு நடை. 1014

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு. 1015

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். 1016

நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாண்ஆள் பவர். 1017

பிறர்நாணத் தக்கது தான்நாணான் ஆயின்
அறம்நாணத் தக்கது உடைத்து. 1018

குலம்சுடும் கொள்கை பிழைப்பின் நலம்சுடும்
நாணின்மை நின்றக் கடை. 1019

நாண்அகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று. 1020

## 103. The way of Maintaining the Family

1. Who says 'I'll do my work, nor slack my hand', His greatness, clothed with dignity supreme, shall stand.

2. The manly act and knowledge full, when these combine In deed prolonged, then lengthens out the race's line.

3. 'I'll make my race renowned, if man shall say, With vest succinct the goddess leads the way.

4. Who labours for his race with unremitting pain, Without a thought spontaneously, his end will gain.

5. With blameless life who seeks to build his race's fame, The world shall circle him, and kindred claim.

6. Of virtuous manliness the world accords the praise To him who gives his powers, the house from which he sprang to raise.

7. The fearless hero bears the brunt amid the warrior throng; Amid his kindred so the burthen rests upon the strong.

8. Wait for no season, when you would your house uprear; 'Twill perish, if you wait supine, or hold your honour dear.

9. Is not his body vase that various sorrows fill, Who would his household screen from every ill?

10. When trouble the foundation saps the house must fall, If no strong hand be nigh to prop the tottering wall.

# 103. குடிசெயல் வகை

கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையின் பீடுஉடையது இல். 1021

ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்
நீள்வினையால் நீளும் குடி. 1022

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 1023

சூழாமல் தானே முடிவுஎய்தும் தம்குடியைத்
தாழாது உஞற்று பவர்க்கு. 1024

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. 1025

நல்ஆண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்ஆண்மை ஆக்கிக் கொளல். 1026

அமர்அகத்து வன்கண்ணர் போலத் தமர்அகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை. 1027

குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும். 1028

இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு. 1029

இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்ஆள் இலாத குடி. 1030

## 104. Agriculture

1. Howe'er they roam, the world must follow still the plougher's team; Though toilsome, culture of the ground as noblest toil esteem.

2. The ploughers are the linch-pin of the world; they bear Them up who other works perform, too weak its toils to share.

3. Who ploughing eat their food, they truly live: The rest to others bend subservient, eating what they give.

4. O'er many a land they 'll see their monarch reign, Whose fields are shaded by the waving grain.

5. They nothing ask from others, but to askers give, Who raise with their own hands the food on which they live.

6. For those who've left what all men love no place is found, When they with folded hands remain who till the ground.

7. Reduce your soil to that dry state, When ounce is quarter-ounce's weight; Without one handful of manure, Abundant, crops you thus secure.

8. To cast manure is better than to plough; Weed well; to guard is more than watering now.

9. When master from the field aloof hath stood; Then land will sulk, like wife in angry mood.

10. The earth, that kindly dame, will laugh to see, Men seated idle pleading poverty.

## 104. உழவு

சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை. 1031

உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃது ஆற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து. 1032

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். 1033

பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர். 1034

இரவார் இரப்பார்க்குஒன்று ஈவர் கரவாது
கைசெய்துஊண் மாலை யவர். 1035

உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேம்என் பார்க்கும் நிலை. 1036

தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்துஎருவும்
வேண்டாது சாலப் படும். 1037

ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்
நீரினும் நன்றுஅதன் காப்பு. 1038

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும். 1039

இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலம்என்னும் நல்லாள் நகும். 1040

## 105. Poverty

1. You ask what sharper pain than poverty is known; Nothing pains more than poverty, save poverty alone.

2. Malefactor matchless! poverty destroys This world's and the next world's joys.

3. Importunate desire, which poverty men name, Destroys both old descent and goodly fame.

4. From penury will spring, 'mid even those of noble race, Oblivion that give birth to words that bring disgrace.

5. From poverty, that grievous woe, Attendant sorrows plenteous grow.

6. Though deepest sense, well understood, the poor man's world convey, Their sense from memory of mankind will fade away.

7. From indigence devoid of virtue's grace, The mother e'en that bare, estranged, will turn her face.

8. And will it come today as yesterday, The grief of want that eats my soul away?

9. Amid the flames sleep may men's eyelids close, In poverty the eye knows no repose.

10. Unless the destitute will utterly themselves deny, They cause their neighbour's salt and vinegar to die.

## 105. நல்குரவு

இன்மையின் இன்னாதது யாதுஎனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. 1041

இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். 1042

தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குரவு என்னும் நசை. 1043

இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும். 1044

நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். 1045

நற்பொருள் நன்குஉணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். 1046

அறம்சாரா நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். 1047

இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு. 1048

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதுஒன்றும் கண்பாடு அரிது. 1049

துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று. 1050

## 106. Mendicancy

1. When those you find from whom 'tis meet to ask, - for aid apply; Theirs is the sin, not yours, if they the gift deny.
2. Even to ask an alms may pleasure give, If what you ask without annoyance you receive.
3. The men who nought deny, but know what's due, before their face To stand as suppliants affords especial grace.
4. Like giving alms, may even asking pleasant seem. From men who of denial never even dream.
5. Because on earth the men exist, who never say them nay, Men bear to stand before their eyes for help to pray.
6. If those you find from evil of 'denial' free, At once all plague of poverty will flee.
7. If men are found who give and no harsh words of scorn employ, The minds of askers, through and through, will thrill with joy.
8. If askers cease, the mighty earth, where cooling fountains flow, Will be a stage where wooden puppets come and go.
9. What glory will there be to men of generous soul, When none are found to love the askers' role?
10. Askers refused from wrath must stand aloof; The plague of poverty itself is ample proof.

## 106. இரவு

இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
அவர்பழி தம்பழி அன்று. 1051

இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை
துன்பம் உறாஅ வரின். 1052

கரப்புஇலா நெஞ்சின் கடன்அறிவார் முன்நின்று
இரப்பும்ஓர் ஏஎர் உடைத்து. 1053

இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு. 1054

கரப்பிலார் வையகத்து உண்மையால் கண்நின்று
இரப்பவர் மேற்கொள் வது. 1055

கரப்புஇடும்பை இல்லாரைக் காணின் நிரப்புஇடும்பை
எல்லாம் ஒருங்கு கெடும். 1056

இகழ்ந்துஎள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துஉள்ளம்
உள்ளுள் உவப்பது உடைத்து. 1057

இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. 1058

ஈவார்கண் என்உண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை. 1059

இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்புஇடும்பை
தானேயும் சாலும் கரி. 1060

## 107. The Dread of Mendicancy

1. Ten million-fold 'tis greater gain, asking no alms to live, Even from those, like eyes in worth, who nought concealing gladly give.

2. If he that shaped the world desires that men should begging go, Through life's long course, let him a wanderer be and perish so.

3. Nothing is harder than the hardness that will say, 'The plague of penury by asking alms we'll drive away.'

4. Who ne'er consent to beg in utmost need, their worth Has excellence of greatness that transcends the earth.

5. Nothing is sweeter than to taste the toil-won cheer Though mess of pottage as tasteless as the water clear.

6. E'en if a draught of water for a cow you ask, Nought's so distasteful to the tongue as beggar's task.

7. One thing I beg of beggars all, 'If beg ye may, Of those who hide their wealth, beg not, I pray.'

8. The fragile bark of beggary Wrecked on denial's rock will lie.

9. The heart will melt away at thought of beggary, With thought of stern repulse 'twill perish utterly.

10. E'en as he asks, the shamefaced asker dies; Where shall his spirit hide who help denies?

## 107. இரவச்சம்

கரவாது உவந்துஈயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும். 1061

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகுஇயற்றி யான். 1062

இன்மை இடும்பை இரந்துதீர் வாம்என்னும்
வன்மையின் வன்பாட்டது இல். 1063

இடம்எல்லாம் கொள்ளாத் தகைத்தே இடம்இல்லாக்
காலும் இரவுஒல்லாச் சால்பு. 1064

தெள்நீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்தது
உண்ணலின் ஊங்குஇனியது இல். 1065

ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல். 1066

இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று. 1067

இரவுஎன்னும் ஏமாப்புஇல் தோணி கரவுஎன்னும்
பார்தாக்கப் பக்கு விடும். 1068

இரவுஉள்ள உள்ளம் உருகும் கரவுஉள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும். 1069

கரப்பவர்க்கு யாங்குஒளிக்கும் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர். 1070

# 108. Baseness

1. The base resemble men in outward form, I ween; But counterpart exact to them I've never seen.

2. Than those of grateful heart the base must luckier be, Their minds from every anxious thought are free!

3. The base are as the Gods; they too Do ever what they list to do!

4. When base men those behold of conduct vile, They straight surpass them, and exulting smile.

5. Fear is the base man's virtue; if that fail, Intense desire some little may avail.

6. The base are like the beaten drum; for, when they hear They sound the secret out in every neighbour's ear.

7. From off their moistened hands no clinging grain they shake, Unless to those with clenched fist their jaws who break.

8. The good to those will profit yield fair words who use; The base, like sugar-cane, will profit those who bruise.

9. If neighbours clothed and fed he see, the base Is mighty man some hidden fault to trace?

10. For what is base man fit, if griefs assail? Himself to offer there and then, for sale!

## 108. கயமை

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பார் யாம்கண்டது இல். 1071

நன்றுஅறி வாரின் கயவர் திருஉடையர்
நெஞ்சத்து அவலம் இலர். 1072

தேவர் அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்தொழுக லான். 1073

அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ். 1074

அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது. 1075

அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்துஉரைக்க லான். 1076

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுஉடைக்கும்
கூன்கையர் அல்லா தவர்க்கு. 1077

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ். 1078

உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ். 1079

எற்றிற்கு உரியர் கயவர்ஒன்று உற்றக்கால்
விற்றற்கு உரியர் விரைந்து. 1080

## 109. Mental Disturbance caused by the Beauty of the Princess

1. Goddess? or peafowl rare? She whose ears rich jewels wear, Is she a maid of human kind? All wildered is my mind!

2. She of the beaming eyes, To my rash look her glance replies, As if the matchless goddess' hand Led forth an armed band.

3. Death's form I formerly knew not; but now 'tis plain to me; He comes in lovely maiden's guise, With soul-subduing eyes.

4. In sweet simplicity, A woman's gracious form hath she; But yet those eyes, that drink my life, Are with the form at strife!

5. The light that on me gleams, Is it death's dart? or eye's bright beams? Or fawn's shy glance? All three appear In form of maiden here.

6. If cruel eye-brow's bow, Unbent, would veil those glances now; The shafts that would this trembling heart, Her eyes no more would dart.

7. As veil o'er angry eyes Of raging elephant that lies, The silken cincture's folds invest This maiden's painting breast.

8. Ah! woe is me! my might, That awed my foemen in the fight, By lustre of that beaming brow Borne down, lies broken now!

9. Like tender fawn's her eye; Clothed on is she with modesty; What added beauty can be lent; By alien ornament?

10. The palm-tree's fragrant wine, To those who taste yields joys divine; But love hath rare felicity For those that only see!

# 109. தகையணங்குறுத்தல்

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு. 1081

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்குஅணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து. 1082

பண்டுஅறியேன் கூற்றுஎன் பதனை இனிஅறிந்தேன்
பெண்தகையால் பேரமர்க் கட்டு. 1083

கண்டார் உயிருண்ணும் தோற்றத்தால் பெண்தகைப்
பேதைக்கு அமர்த்தன கண். 1084

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து. 1085

கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்குஅஞர்
செய்யல மன்இவள் கண். 1086

கடாஅக் களிற்றின்மேல் கண்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில். 1087

ஒள்நுதற்கு ஓஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும்என் பீடு. 1088

பிணைஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணிஎவனோ ஏதில தந்து. 1089

உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று. 1090

# 110. Recognition of the Signs (Of Mutual Love)

1. A double witchery have glances, of her liquid eye; One glance is glance that brings me pain; the other heals again.

2. The furtive glance, that gleams one instant bright, Is more than half of love's supreme delight.

3. She looked, and looking drooped her head: On springing shoot of love 'its water shed!

4. I look on her: her eyes are on the ground the while: I look away: she looks on me with timid smile.

5. She seemed to see me not; but yet the maid He love, by smiling side-long glance, betrayed.

6. Though with their lips affection the disown, Yet, when they hate us not, 'tis quickly known.

7. The slighting words that anger feign, while eyes their love reveal. Are signs of those that love, but would their love conceal.

8. I gaze, the tender maid relents the while; And, oh the matchless grace of that soft smile!

9. The look indifferent, that would its love disguise, Is only read aright by lovers' eyes.

10. When eye to answering eye reveals the tale of love, All words that lips can say must useless prove.

# 110. குறிப்பறிதல்

இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து. 1091

கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது. 1092

நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர். 1093

யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும். 1094

குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும். 1095

உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும். 1096

செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன்று உற்றார் குறிப்பு. 1097

அசைஇயற்கு உண்டுஆண்டுஓர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும். 1098

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள. 1099

கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல. 1100

# 111. Rejoicing in the Embrance

1. All joys that senses five-sight, hearing, taste, smell, touch-can give, In this resplendent armlets bearing damsel live!
2. Disease and medicine antagonists we surely see; This maid, to pain she gives, herself is remedy.
3. Than rest in her soft arms to whom the soul is giv'n, Is any sweeter joy in his, the Lotus-eyed-one's heaven?
4. Withdraw, it burns; approach, it soothes the pain; Whence did the maid this wondrous fire obtain?
5. In her embrance, whose locks with flowery wreaths are bound, Each varied form of joy the soul can wish is found.
6. Ambrosia are the simple maiden's arms; when I attain Their touch, my withered life puts forth its buds again!
7. As when one eats from household store, with kindly grace Sharing his meal: such is this golden maid's embrance.
8. Sweet is the strict embrace of those whom fond affection binds, Where no dissevering breath of discord entrance finds.
9. The jealous variance, the healing of the strife, reunion gained: These are the fruits from wedded love obtained.
10. The more men learn, the more their lack of learning they detect; 'Tis so when I approach the maid with gleaming jewels decked.

# 111. புணர்ச்சி மகிழ்தல்

கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள. 1101

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து. 1102

தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. 1103

நீங்கின் தெறூஉம் குறுகும்கால் தண்என்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள். 1104

வேட்ட பொழுதின் அவைஅவை போதுமே
தோட்டார் கதுப்பினாள் தோள். 1105

உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள். 1106

தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. 1107

வீழும் இருவர்க்கு இனிதே வளிஇடை
போழப் படாஅ முயக்கு. 1108

ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன். 1109

அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு. 1110

## 112. The praise of her Beauty

1. O flower of the sensitive plant! than thee More tender's the maiden beloved by me.

2. You deemed, as you saw the flowers, her eyes were as flowers, my soul, That many may see; it was surely some folly that over you stole!

3. As tender shoot her frame; teeth, pearls; around her odours blend; Darts are the eyes of her whose shoulders like the 'bambu'bend.

4. The louts, seeing her, with head demiss, the ground would eye, And say, 'With eyes of her, rich gems who wears, we cannot vie.'

5. The flowers of the sensitive plant as a girdle around her she placed; The stems she forgot to nip off; they 'll weight down the delicate waist.

6. The stars perplexed are rushing wildly from their spheres; For like another moon this maiden's face appears.

7. In moon, that waxing waning shines, as sports appears, Are any spots discerned in face of maiden here?

8. Farewell, O moon! If that thine orb could shine Bright as her face, thou shouldst be love of mine.

9. If as her face, whose eyes are flowers, thou wouldst have charms for me, Shine for my eyes alone, O moon, shine not for all to see!

10. The flower of the sensitive plant, and the down on the swan's white breast, As the thorn are harsh, by the delicate feet of this maiden pressed.

# 112. நலம் புனைந்துரைத்தல்

நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள். 1111

மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று. 1112

முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு. 1113

காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாணிழை கண்ஒவ்வேம் என்று. 1114

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. 1115

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியின் கலங்கிய மீன். 1116

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுஉண்டோ மாதர் முகத்து. 1117

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி. 1118

மலர்அன்ன கண்ணாள் முகம்ஒத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி. 1119

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். 1120

# 113. Declaration of Love's special Excellence

## I - He

1. The dew on her white teeth, whose voice is soft and low, Is as when milk and honey mingled flow.

2. Between this maid and me the friendship kind Is as the bonds that soul and body bind.

3. For her with beauteous brow, the maid I love, there place is none: To give her image room, O pupil of mine eye, begone!

4. Life is she to my very soul when she draws nigh; Dissevered from the maid with jewels rare, I die!

5. I might recall, if I could once forget; but from my heart Her charms fade not, whose eyes gleam like the warrior's dart.

## II - She

6. My loved one's sublet form departs not from my eyes; I wink them not, lest I should pain him where he lies.

7. My love doth ever in my eyes reside; I stain them not, fearing his form to hide.

8. Within my heart my lover dwells; from food I turn That smacks of heat, lest he should feel it burn.

9. I fear his form to hide, nor close my eyes: 'Her love estranged is gone!' the village cries.

10. Rejoicing in my very soul he ever lies; Her love estranged is gone far off!' the village cries.

# 113. காதல் சிறப்புரைத்தல்

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வால்எயிறு ஊறிய நீர். 1121

உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு. 1122

கருமணியில் பாவாய்நீ போதாய் யாம் வீழும்
திருநுதற்கு இல்லை இடம். 1123

வாழ்தல் உயிர்க்குஅன்னள் ஆயிழை சாதல்
அதற்குஅன்னள் நீங்கும் இடத்து. 1124

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம். 1125

கண்உள்ளின் போகார் இமைப்பின் பருவரார்
நுண்ணியர்எம் காத லவர். 1126

கண்உள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக்கு அறிந்து. 1127

நெஞ்சத்தார் காத லவராக வெய்துஉண்டல்
அஞ்சுதும் வேபாக்கு அறிந்து. 1128

இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னும்இவ் வூர். 1129

உவந்துஉறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துஉறைவர்
ஏதிலர் என்னும்இவ் வூர். 1130

## 114. The Abandonment of Reserve

1. To those who've proved love's joy, and now afflicted mourn, Except helpful 'horse of palm', no other strength remains.

2. My body and my soul, that can no more endure, Will lay reserve aside, and mount the 'horse of palm'.

3. I once retained reserve and seemly manliness; To-day I nought possess but lovers' 'horse of palm'.

4. Love's rushing tide will sweep away the raft Of seemly manliness and shame combined.

5. The maid that slender armlets wears, like flowers entwined, Has brought me 'horse of palm,' and pangs of eventide!

6. Of climbing 'horse of palm' in midnight hour, I think; My eyes know no repose for that same simple maid.

7. There's nought of greater worth than woman's long - enduring soul, Who, vexed by love like ocean waves, climbs not the 'horse of palm'.

8. In virtue hard to move, yet very tender, too, are we; Love deems not so, would rend the veil, and court publicity!

9. 'There's no one knows my heart,' so says my love, And thus, in public ways, perturbed will rove.

10. Before my eyes the foolish make a mock of me, Because they ne'er endured the pangs I not must drie.

## 114. நாணுத் துறவுரைத்தல்

காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடல்அல்லது இல்லை வலி. 1131

நோனா உடம்பும் உயிரும் மடல்ஏறும்
நாணினை நீக்கி நிறுத்தி. 1132

நாணொடு நல்லாண்மை பண்டுஉடையேன் இன்றுஉடையேன்
காமுற்றார் ஏறும் மடல். 1133

காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு
நல்லாண்மை என்னும் புணை. 1134

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர். 1135

மடல்ஊர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படல்ஒல்லா பேதைக்குஎன் கண். 1136

கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்
பெண்ணின் பெருந்தக்கது இல். 1137

நிறைஅரியர் மன்அளியர் என்னாது காமம்
மறைஇறந்து மன்று படும். 1138

அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்
மறுகின் மறுகும் மருண்டு. 1139

யாங்கண்ணின் காண நகுப அறிவுஇல்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. 1140

## 115. The Announcement of the Rumour

1. By this same rumour's rise, my precious life stands fast; Good fortune grant the many know this not!

2. The village hath to us this rumour giv'n, that makes her mine; Unweeting all the rareness of the maid with flower-like eye.

3. The rumour spread within the town, is it not gain to me? It is as though that were obtained that may not be.

4. The rumour rising makes my love to rise; My love would lose its power and languish otherwise.

5. The more man drinks, the more he ever drunk would be; The more my love's revealed, the sweeter 'tis to me!

6. I saw him but one single day: rumour spreads soon, As darkness, when the dragon seizes on the moon.

7. My anguish grows apace: the town's report Manures it; my mother's word doth water it.

8. With butter-oil extinguish fire! 'Twill prove Harder by scandal to extinguish love.

9. When he who said 'Fear not!' hath left me blamed, While many shrink, can I from rumour hide ashamed?

10. If we desire, who loves will grant what we require; This town sends forth the rumour we desire!

# 115. அலர் அறிவுறுத்தல்

அலர்எழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலர்அறியார் பாக்கியத் தால். 1141

மலர்அன்ன கண்ணாள் அருமை அறியாது
அலர்எமக்கு ஈந்ததுஇவ் வூர். 1142

உறாஅதோ ஊரறிந்த கெளவை அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. 1143

கவ்வையால் கவ்விது காமம் அது இன்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து. 1144

களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது. 1145

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று. 1146

ஊரவர் கெளவை எருஆக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய். 1147

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கெளவையால்
காமம் நுதுப்பேம் எனல். 1148

அலர்நாண ஒல்வதோ அஞ்சல்ஓம்பு என்றார்
பலர்நாண நீத்தக் கடை. 1149

தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கெளவை எடுக்கும்இவ் வூர். 1150

## 116. Separation Unendurable

1. If you will say, 'I leave thee not, 'then tell me so; Of quick return tell those that can survive this woe.

2. It once was perfect joy to look upon his face; But now the fear of parting saddens each embrace.

3. To trust henceforth is hard, if ever he depart, E'en he, who knows his promise and my breaking heart.

4. If he depart, who fondly said, 'Fear not,' what blame's incurred By those who trusted to his reassuring word?

5. If you would guard my life, from going him restrain Who fills my life! If he depart, hardly we meet again.

6. To cherish longing hope that he should ever gracious be, Is hard, when he could stand, and of departure speak to me.

7. The bracelet slipping from my wrist announced before Departure of the Prince that rules the ocean shore.

8. 'Tis sad to sojourn in the town where no kind kinsmen dwell; 'Tis sadder still to bid a friend beloved farewell.

9. Fire burns the hands that touch; but smart of love Will burn in hearts that far away remove.

10. Sorrow's sadness meek sustaining, Driving sore distress away, Separation uncomplaining many bear the livelong day!

# 116. பிரிவாற்றாமை

செல்லாமை உண்டேல் எனக்குஉரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை. 1151

இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவுஅஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு. 1152

அரிதரோ தேற்றம் அறிவுஉடையார் கண்ணும்
பிரிவுஓர் இடத்துஉண்மை யான். 1153

அளித்துஅஞ்சல் என்றுஅவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க்கு உண்டோ தவறு. 1154

ஓம்பின் அமைந்தார் பிரிவுஓம்பல் மற்றவர்
நீங்கின் அரிதால் புணர்வு. 1155

பிரிவுஉரைக்கும் வன்கண்ணர் ஆயின் அரிதுஅவர்
நல்குவர் என்னும் நசை. 1156

துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை. 1157

இன்னாது இனன்இல்ஊர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு. 1158

தொடின்சுடின் அல்லது காமநோய் போல
விடின்சுடல் ஆற்றுமோ தீ. 1159

அரிதுஆற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவுஆற்றிப்
பின்இருந்து வாழ்வார் பலர். 1160

## 117. Complainings

1. I would my pain conceal, but see! It surging swells, As streams to those that draw from ever springing wells.

2. I cannot hide this pain of mine, yet shame restrains When I would tell it out to him who caused my pains.

3. My soul, like porter's pole, within my wearied frame, Sustains a two-fold burthen poised, of love and shame.

4. A sea of love, 'tis true, I see stretched out before, But not the trusty bark that wafts to yonder shore.

5. Who work us woe in friendship's trustful hour, What will they prove when angry tempests lower?

6. A happy love's sea of joy; but mightier sorrows roll From unpropitious love athwart the troubled soul.

7. I swim the cruel tide of love, and can no shore descry, In watches of the night, too, 'mid the waters, only I!

8. All living souls in slumber soft she steeps; But me along kind night for her companion keeps!

9. More cruel than the cruelty of him, the cruel one, In these sad times are lengthening hours of night I watch alone.

10. When eye of mine would as my soul go forth to him, It knows not how through floods of its own tears to swim.

# 117. படர் மெலிந்து இரங்கல்

மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும். 1161

கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும். 1162

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பின் அகத்து. 1163

காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல். 1164

துப்பின் எவன்ஆவர் மன்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர். 1165

இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதுஅடுங்கால்
துன்பம் அதனின் பெரிது. 1166

காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன். 1167

மன்னுயி ரெல்லாந் துயிற்றி அளித்துஇரா
என்அல்லது இல்லை துணை. 1168

கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா. 1169

உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண். 1170

## 118. Eyes consumed with Grief

1. They showed me him, and then my endless pain I saw: Why then should weeping eyes complain?

2. How glancing eyes, that rash unweeting looked that day, With sorrows measureless are wasting now away!

3. The eyes that threw such eager glances round erewhile Are weeping now. Such folly surely claims a smile!

4. Those eyes have wept till all the fount of tears is dry, That brought upon me pain that knows no remedy.

5. The eye that wrought me more than sea could hold of woes, Is suffering pangs that banish all repose.

6. Oho! how sweet a thing to see! the eye That wrought this pain, in the same gulf doth lie.

7. Aching, aching, let those exhaust their stream, That melting, melting, that day gazed on him.

8. Who loved me once, on loving now doth here remain; Not seeing him, my eye no rest can gain.

9. When he comes not, all slumber flies; no sleep when he is there; Thus every way my eyes have troubles hard to bear.

10. It is not hard for the town the knowledge to obtain, when eyes, as mine, like beaten tambours, make the mystery plain.

## 118. கண் விதுப்பழிதல்

கண்தாம் கலுழ்வது எவன்கொலோ தண்டாநோய்
தாம்காட்ட யாம்கண் டது. 1171

தெரிந்துஉணரா நோக்கிய உண்கண் பரிந்துஉணராப்
பைதல் உழப்பது எவன். 1172

கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்கது உடைத்து. 1173

பெயல்ஆற்றா நீர்உலந்த உண்கண் உயல்ஆற்றா
உய்வுஇல்நோய் என்கண் நிறுத்து. 1174

படல்ஆற்றா பைதல் உழக்கும் கடல்ஆற்றாக்
காமநோய் செய்தஎன் கண். 1175

ஓஒ இனிதே எமக்குஇந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட் டது. 1176

உழந்துஉழந்து உள்நீர் அறுக விழைந்துஇழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண். 1177

பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றுஅவர்க்
காணாது அமைவில கண். 1178

வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண். 1179

மறைபெறல் ஊரார்க்கு அரிதுஅன்றால் எம்போல்
அறைபறை கண்ணா ரகத்து. 1180

## 119. The Pallid Hue

1. I willed my lover absent should remain; Of pining's sickly hue to whom shall I complain?

2. 'He gave': this sickly hue thus proudly speaks, Then climbs and all my frame its chariot makes.

3. Of comeliness and shame he me bereft, While pain and sickly hue, in recompense, he left.

4. I meditate his words, his worth is theme of all I say, This sickly hue is false that would my trust betray.

5. My lover there went froth to roam; This pallor of my frame usurps his place at home.

6. As darkness waits till lamp expires, to fill the place, This pallor waits till I enjoy no more my lord's embrace.

7. I lay in his embrace, I turned unwittingly; Forthwith this hue, as you might grasp it, came on me.

8. On me, because I pine, they cast a slur; But no one say 'He first deserted her'.

9. Well! let my frame, as now, be sicklied o'er with pain, if he who won my heart's consent, in good estate remain.!

10. 'Tis well, though men deride me for my sickly hue of pain; If they from calling him unkind, who won my love refrain.

# 119. பசப்புறு பருவரல்

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தஎன்
பண்பியார்க்கு உரைக்கோ பிற. 1181

அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்துஎன்
மேனிமேல் ஊரும் பசப்பு. 1182

சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து. 1183

உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு. 1184

உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்புஊர் வது. 1185

விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்குஅற்றம் பார்க்கும் பசப்பு. 1186

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு. 1187

பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்
துறந்தார் அவர்என்பார் இல். 1188

பசக்கமன் பட்டாங்குஎன் மேனி நயப்பித்தார்
நன்னிலையர் ஆவர் எனின். 1189

பசப்புஎனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின். 1190

## 120. The Solitary Anguish

1. The bliss to be beloved by those they love who gains, Of love the stoneless, luscious fruit obtains.

2. As heaven on living men showers blessings from above, Is tender grace by lovers shown to those they love.

3. Who love and are beloved to them alone Belongs the boast, 'We've made life's very joys our own.'

4. Those well-beloved will luckless prove, Unless beloved by those they love.

5. From him I love to me what gain can be, Unless, as I love him, he loveth me?

6. Love on one side is bad; like balanced load By porter borne, love on both sides is good.

7. While kaman rushes straight at me alone, Is all my pain and wasting grief unknown?

8. Who hear from lover's lips no pleasant word from day to day, Yet in the world live out their life, - no braver soul than they!

9. Though he my heart desires no grace accords to me, Yet every accent of his voice is melody.

10. Tell him thy pain that loves not thee? Farewell, my soul, fill up the sea!

# 120. தனிப்படர் மிகுதி

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி. 1191

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி. 1192

வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே
வாழுநம் என்னும் செருக்கு. 1193

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின். 1194

நாம்காதல் கொண்டார் நமக்குஎவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை. 1195

ஒருதலையான் இன்னாது காமம்காப் போல
இருதலை யானும் இனிது. 1196

பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றுஒழுகு வான். 1197

வீழ்வாரின் இன்சொல் பெறாஅது உலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல். 1198

நசைஇயார் நல்காா் எனினும் அவர்மாட்டு
இசையும் இனிய செவிக்கு. 1199

உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு. 1200

# 121. Sad Memories

1. From thought of her unfailing gladness springs, Sweeter than palm-rice wine the joy love brings.

2. How great is love! Behold its sweetness past belief! Think on the lover, and the spirit knows no grief.

3. A fit of sneezing threatened, but it passed away; He seemed to think of me, but do his fancies stray?

4. Have I a place within his heart! From mine, alas! he never doth depart.

5. Me from his heart he jealously excludes: Hath he no shame who ceaseless on my heart intrudes?

6. How live I yet? I live to ponder o'er The days of bliss with him that are no more.

7. If I remembered not what were I then? And yet, The fiery smart of what my spirit knows not to forget!

8. My frequent thought no wrath excites. It is not so? This honour doth my love on me bestow.

9. Dear life departs, when his ungracious deeds I ponder o'er, who said erewhile, 'We're one for evermore'.

10. Set not; so may'st thou prosper, moon! that eyes may see My love who went away, but ever bides with me.

# 121. நினைந்தவர் புலம்பல்

உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது. 1201

எனைத்துஒன்று இனிதேகாண் காமம்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதுஒன்று இல். 1202

நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும். 1203

யாமும் உளேம்கொல் அவர்நெஞ்சத்து எம்நெஞ்சத்து
ஓஒ உளரே அவர். 1204

தம்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எம்நெஞ்சத்து ஓவா வரல். 1205

மற்றுயான் என்உளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன். 1206

மறப்பின் எவன்ஆவன் மற்கொல் மறப்புஅறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும். 1207

எனைத்து நினைப்பினும் காயார் அனைத்துஅன்றோ
காதலர் செய்யும் சிறப்பு. 1208

விளியும்என் இன்னுயிர் வேறல்லம் என்பார்
அளிஇன்மை ஆற்ற நினைந்து. 1209

விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி. 1210

## 122. The Visions of the Night

1. It came and brought to me, that nightly vision rares, A message from my love, - what feast shall I prepare?

2. If my dark, carp-like eye will close in sleep, as I implore, The tale of my long-suffering life I'll tell my loved one o'er.

3. Him, who in waking hour no kindness shows, In dreams I see; and so my lifetime goes!

4. Some pleasure I enjoy when him who loves not me in waking hours, the vision searches out and makes me see.

5. As what I then beheld in waking hour was sweet, so pleasant dreams in hour of sleep my spirit great.

6. And if there were no waking hour, my love in dreams would never from my side remove.

7. The cruel one, in waking hour, who all ungracious seems, Why should he thus torment my soul in nightly dreams.

8. And when I sleep he holds my form embraced; And when I wake to fill my heart makes haste!

9. In dreams who ne'er their lover's form perceive, For those in waking hours who show no love will grieve.

10. They say, that he in waking hours has left me lone; In dreams they surely see him not, - these people of the town.

# 122. கனவுநிலை உரைத்தல்

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து. 1211

கயல்உண்கண் யான்இரப்பத் துஞ்சின் கலந்தார்க்கு
உயல்உண்மை சாற்றுவேன் மன். 1212

நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டுஎன் உயிர். 1213

கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு. 1214

நனவினால் கண்டதூஉம் ஆங்கே கனவும்தான்
கண்ட பொழுதே இனிது. 1215

நனவுஎன ஒன்றில்லை ஆயின் கனவினால்
காதலர் நீங்கலர் மன். 1216

நனவினால் நல்காக் கொடியார் கனவினால்
என்எம்மைப் பீழிப் பது. 1217

துஞ்சும்கால் தோள்மேலர் ஆகி விழிக்கும்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து. 1218

நனவினால் நல்காரை நோவர் கனவினால்
காதலர்க் காணா தவர். 1219

நனவினால் நம்நீத்தார் என்பர் கனவினால்
காணார்கொல் இவ்வூ ரவர். 1220

## 123. Lamentations at Eventide

1. Thou art not evening, but a spear that doth devour, The souls of brides; farewell, thou evening hour!

2. Thine eye is said; Hail, doubtful hour of eventide! Of cruel eye, as is my spouse, is too thy bride?

3. With buds of chilly dew wan evening's shade enclose; My anguish buds space and all my sorrow grows.

4. When absent is my love, the evening hour descends, As when an alien host to field of battle wends.

5. O morn, how have I won thy grace? thou bring's relief O eve, why art thou foe! thou dost renew my grief.

6. The pangs that evening brings I never knew, Till he, my wedded spouse, from me withdraw.

7. My grief at morn a bud, all day an opening flower, full-blown expands in evening hour.

8. The shepherd's pipe is like a murderous weapon, To my ear, For it proclaims the hour of ev'ning's fiery anguish near.

9. If evening's shades, that darken all my soul, extend from this afflicted town will sound of grief ascend.

10. This darkening eve, my darkling soul must perish utterly; Remembering him who seeks for wealth, but seeks not me.

# 123. பொழுதுகண்டு இரங்கல்

மாலையோ அல்லை மணந்தார் உயிர்உண்ணும்
வேலைநீ வாழி பொழுது. 1221

புன்கண்ணை வாழி மருள்மாலை எம்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை. 1222

பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித்
துன்பம் வளர வரும். 1223

காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும். 1224

காலைக்குச் செய்தநன்று என்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. 1225

மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்தது இலேன். 1226

காலை அரும்பிப் பகல்எல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய். 1227

அழல்போலும் மாலைக்குத் தூதுஆகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை. 1228

பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. 1229

பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை
மாயும்என் மாயா உயிர். 1230

## 124. Wasting Away

1. Thine eyes grown dim are now ashamed the fragrant flow'rs to see, Thinking on him who wand'ring far, leaves us in misery.
2. The eye, with sorrow wan, all wet with dew of tears, As witness of the lover's lack of love appears.
3. These withered arms, desertion's pangs abundantly display, That swelled with joy on that glad nuptial day.
4. When lover went, then faded all their wonted charms, And armlets' golden round slips off from these poor wasted arms.
5. These wasted arms, the bracelet with their wonted beauty gone, cruelty declare of that most cruel one.
6. I grieve, 'tis pain to me to hear him cruel chid, Because the armlet from my wasted arm has slid.
7. My heart! say ought of glory with thou gain, If to that cruel one thou of thy wasted arms complain?
8. One day the fervent pressure of embracing arms I checked, Grew wan the forehead of the maid with golden armlet decked.
9. As we embraced a breath of wind found entrance there; The maid's large liquid eyes were dimmed with care.
10. The dimness of her eye felt sorrow now, Beholding what was done by that bright brow.

# 124. உறுப்பு நலன் அழிதல்

சிறுமை நமக்குஒழியச் சேண்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண். 1231

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண். 1232

தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள். 1233

பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். 1234

கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். 1235

தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து. 1236

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்குஎன்
வாடுதோள் பூசல் உரைத்து. 1237

முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். 1238

முயக்குஇடைத் தண்வளி போழப் பசப்புஉற்ற
பேதை பெருமழைக் கண். 1239

கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. 1240

## 125. Soliloquy

1. My heart, canst thou not thinking of some med's cine tell, Not anyone, to drive away this grief incurable?
2. Since he loves not, thy smart Is folly, fare thee well my heart!
3. What comes of sitting here in pining though, O heart? He knows No pitying thought, the cause of all these wasting woes.
4. O rid me of these eyes, my heart; for they, Longing to see him, wear my life away.
5. O heart, as a foe, can I abandon utterly Him who, though I long for him, longs not for me?
6. My heart, false is the fire that burns; thou canst not wrath maintain, If thou thy love behold, embracing, soothing all thy pain.
7. Or bid thy love, or bid thy shame depart; For me, I cannot bear them both, my worthy heart!
8. Thou art befooled, my heart, thou followest him who flees from thee; And still thou yearning criest: 'He will not pity show nor love to me.'
9. My heart! my lover lives within my mind; Roaming, whom does thou think to find?
10. If I should keep in mind the man who utterly renounced me, My soul must suffer further loss of dignity.

# 125. நெஞ்சொடு கிளத்தல்

நினைத்துஒன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்துஒன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து. 1241

காதல் அவர்இலர் ஆகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு. 1242

இருந்துஉள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல். 1243

கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவைஎன்னைத்
தின்னும் அவர்க்காணல் உற்று. 1244

செற்றார் எனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர். 1245

கலந்துஉணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்துஉணராய்
பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு. 1246

காமம் விடுஒன்றோ நாண்விடு நன்நெஞ்சே
யானோ பொறேன்இவ்விரண்டு. 1247

பரிந்துஅவர் நல்கார்என்று ஏங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு. 1248

உள்ளத்தார் காத லவர்ஆக உள்ளிநீ
யாருழைச் சேறிஎன் நெஞ்சு. 1249

துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா
இன்னும் இழத்தும் கவின். 1250

# 126. Reserve Overcome

1. Of womanly reserve love's axe breaks through the door, Barred by the bolt of shame before.

2. What men call love is the one thing of merciless power; It gives my soul no rest, e'en in the midnight hour.

3. I would my love conceal, but like a sneeze it shows itself, and gives no warning sign.

4. In womanly reserve I deemed myself beyond assail; but love will come abroad, and casts away the veil.

5. The dignity that seeks not him who acts as foe, Is the one thing that loving heart can never know.

6. My grief how full of grace, I pray you see! It seeks to follow him that hateth me.

7. No sense of shame my gladdened mind shall prove, when he returns my longing heart to bless with love.

8. The words of that deceiver, versed in every wily art, Are instruments that break through every guard of woman's heart!

9. 'I'll shun his greeting'; saying thus with pride away I went: I held him in my arms, for straight I felt my heart relent.

10. 'We 'll stand aloof and then embrace': is this for them to say, Whose hearts are as the fat that in the blaze dissolved away?

# 126. நிறையழிதல்

காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. 1251

காமம் எனஒன்றோ கண்ணின்றுஎன் நெஞ்சத்தை
யாமத்தும் ஆளும் தொழில். 1252

மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்புஇன்றித்
தும்மல்போல் தோன்றி விடும். 1253

நிறைஉடையேன் என்பேன்மன் யானோஎன் காமம்
மறைஇறந்து மன்று படும். 1254

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதுஒன்று அன்று. 1255

செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ
எற்றுஎன்னை உற்ற துயர். 1256

நாண்என ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின். 1257

பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை. 1258

புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு. 1259

நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்துஊடி நிற்பேம் எனல். 1260

# 127. Mutual Desire

1. My eyes have lost their brightness, sight is dimmed; my fingers worn, With nothing on the wall the days since I was left forlorn.

2. O thou with gleaming jewels decked, could I forget for this one day, Henceforth these bracelets from my arms will slip, my beauty worn away.

3. On victory intent, His mind sole company he went; And I yet life sustain! And long to see his face again!

4. 'He comes against, who left my side, and shall taste love's joy', - My heart with rapture swells, when thoughts like these my mind employ.

5. O let my spouse again and sate these longing eyes! That instant from my wasted frame all pallor flies.

6. O let' my spouse but come again to me one day! I'll drink that nectar: wasting grief shall flee away.

7. Shall I draw back, or yield myself, or shall both mingled be, When he returns, my spouse, dear as these eyes to me.

8. O would my king would fight, o'ercome, divide the spoil, At home, to-night, the banquet spread should crown the toil.

9. One day will seem like seven to those who watch and yearn for that glad day when wanderers from afar return.

10. What's my return, the meeting hour, the wished - for greeting worth, If she heart-broken lie. with all her life poured forth?

## 127. அவர்வயின் விதும்பல்

வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாள்ஒற்றித் தேய்ந்த விரல். 1261

இலங்கிழாய் இன்று மறப்பின் என் தோள்மேல்
கலம்கழியும் காரிகை நீத்து. 1262

உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்
வரல்நசைஇ இன்னும் உளேன். 1263

கூடிய காமம் பிரிந்தார் வரவுஉள்ளிக்
கோடுகொடு ஏறும்என் நெஞ்சு. 1264

காண்கமன் கொண்கனைக் கண்ணார கண்டபின்
நீங்கும்என் மென்தோள் பசப்பு. 1265

வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட. 1266

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்அன்ன கேளிர் வரின். 1267

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை அயர்கம் விருந்து. 1268

ஒருநாள் எழுநாள்போல் செல்லும் சேண் சென்றார்
வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு. 1269

பெறின்என்னாம் பெற்றக்கால் என்னாம் உறின்என்னாம்
உள்ளம் உடைந்துஉக்கக் கால். 1270

# 128. The Reading of the Signs

1. Thou hid'st it, yet thine eye, disdaining all restraint, Something, I know not what, would utter of complaint.

2. The simple one whose beauty fills mine eye, whose shoulders curve Like bambu stem, hath all a woman's modest sweet reserve.

3. As through the crystal beads is seen the thread on which they 'restrung, So in her beauty gleams some thought that cannot find a tongue.

4. As fragrance in the opening bud, some secret lies, Concealed in budding smile of this dear damsel's eyes.

5. The secret wiles of her with thronging armlets decked. Are medicines by which my raising grief is checked.

6. While lovingly embracing me, his heart is only grieved: It makes me think that I again shall live of love bereaved.

7. My severance from the lord of this cool shore, My very armlets told me long before.

8. My loved one left me, was it yesterday? Days seven my pallid body wastes away?

9. She viewed her tender arms, she viewed the armlets from them slid; She viewed her feet: all this the lady did.

10. To show by eye the pain of love, and for relief to pray, Is womanhood's most womanly device, men say.

# 128. குறிப்பு அறிவுறுத்தல்

கரப்பினும் கையிகந்து ஒல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவதுஒன்று உண்டு. 1271

கண்நிறைந்த காரிகைக் காம்புஏர்தோள் பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது. 1272

மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதுஒன்று உண்டு. 1273

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு. 1274

செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கும் மருந்துஒன்று உடைத்து. 1275

பெரிதுஆற்றிப் பெட்பக் கலத்தல் அரிதுஆற்றி
அன்புஇன்மை சூழ்வது உடைத்து. 1276

தண்அம் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை. 1277

நெருநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து. 1278

தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதுஆண்டு அவள்செய் தது. 1279

பெண்ணினால் பெண்மை உடைத்துஎன்ப கண்ணினால்
காமநோய் சொல்லி இரவு. 1280

## 129. Desire for Reunion

1. Gladness at the thought, rejoicing at the sight, Not palm-tree wine, but love, yields such delight.

2. When as palmyra tall, fulness of perfect love we gain, Distrust can find no place small as the millet grain.

3. Although his will his only law, he lightly value me, My heart knows no repose unless my lord I see.

4. My friend, I went prepared to show a cool disdain; My heart, forgetting all, could not its love restrain.

5. The eye sees not the rod that paints it; nor can I See any fault, when nothing but faults I find.

6. When him I see, to all his fault I 'm blind: But when I see him not, nothing but faults I find.

7. As those of rescue sure, who plunge into the stream, So did I anger feign, though it must falsehood seem?

8. Though shameful ill it works, dear is the palm-tree wine To drunkards; traitor, so to me that breast of thine!

9. Love is tender as an opening flower, In season due To gain its perfect bliss is rapture known of few.

10. Her eye, as I drew nigh one day, with anger shone: By love o'erpowered, her tenderness surpassed my own.

# 129. புணர்ச்சி விதும்பல்

உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு. 1281

தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்
காமம் நிறைய வரின். 1282

பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணாது அமையல கண். 1283

ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு. 1284

எழுதும்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட இடத்து. 1285

காணும்கால் காணேன் தவறாய காணாக்கால்
காணேன் தவறல் லவை. 1286

உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்துஎன் புலந்து. 1287

இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு. 1288

மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார். 1289

கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினும் தான்விதுப் புற்று. 1290

# 130. Expostulation with Oneself

1. You see his heart is his alone O heart, why not be all my own?

2. 'Tis plain, my heart, that he's estranged from thee; Why go to him as though he were not enemy?

3. The ruined have no friends, they say; and so, my heart, To follow him, at thy desire, from me thou dost depart.

4. See, thou first show offended pride, and then submit, 'I bade; Henceforth such council who will share with thee my heart?

5. I fear I shall not gain, I fear to lose him when I gain; And thus my heart endures unceasing pain.

6. My heart consumes me when I ponder lone, And all my lover's cruelty bemoan.

7. Fall'n neath the sway of this ignoble foolish heart, Which will not him forget, I have forgotten shame.

8. If I contemn him, then disgrace awaits me evermore: My soul that seeks to live his virtues numbers o'er.

9. And who will aid me in my hour of grief, If my own heart comes not to my relief?

10. A trifle is unfriendliness by aliens shown, When our own heart itself is not our own!

# 130. நெஞ்சொடு புலத்தல்

அவர்நெஞ்சு அவர்க்குஆதல் கண்டும் எவன்நெஞ்சே
நீஎமக்கு ஆகா தது. 1291

உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅரெனச் சேறிஎன் நெஞ்சு. 1292

கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல். 1293

இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. 1294

பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும் அறாஅ
இடும்பைத்துஎன் நெஞ்சு. 1295

தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததுஎன் நெஞ்சு. 1296

நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்
மாணா மடநெஞ்சில் பட்டு. 1297

எள்ளின் இளிவாம்என்று எண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு. 1298

துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி. 1299

தஞ்சம் தமர்அல்லர் ஏதிலார் தாம்உடைய
நெஞ்சம் தமர்அல் வழி. 1300

# 131. Pouting

1. Be still reserved, decline his proffered love; A little while his sore distress we'll prove.
2. A cool reserve is like the salt that seasons well the mess, Too long maintained, 'tis like the salt's excess.
3. 'Tis heaping griefs on those whose hearts are grieved; To leave the grieving one without a found embrance.
4. To use no kind conciliating art when lover grieves, Is cutting out the root of tender winding plant that droops.
5. Even to men of good and worthy mid, the petulance Of wives with flowery eyes lacks not a lovely grace.
6. Love without hatred is ripened fruit; Without some lesser strife, fruit immature.
7. A lovers' quarrel brings its pain, when mind afraid Asks doubtful, 'Will reunion sweet be long delayed?'
8. What good can grieving do, when none who love Are there to know the grief thy soul endures?
9. Water is pleasant in the cooling shade; So coolness for a time with those we love.
10. Of her who leaves me thus in variance languishing, To think within my heart with love is fond desire.

# 131. புலவி

புல்லாது இராஅப் புலத்தை அவர்உறும்
அல்லல்நோய் காண்கம் சிறிது. 1301

உப்புஅமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். 1302

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். 1303

ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதல்அரிந் தற்று. 1304

நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை
பூஅன்ன கண்ணார் அகத்து. 1305

துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று. 1306

ஊடலின் உண்டுஆங்குஓர் துன்பம் புணர்வது
நீடுவது அன்றுகொல் என்று. 1307

நோதல் எவன்மற்று நொந்தார்என்று அஃதுஅறியும்
காதலர் இல்லா வழி. 1308

நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது. 1309

ஊடல் உணங்க விடுவாரோடு என்நெஞ்சம்
கூடுவேம் என்பது அவா. 1310

# 132. Feigned Anger

## I - She

1. From thy regard all womankind Enjoys and equal grace; O thou of wandering fickle mid, I shrink from thine embrance!
2. One day we silent sulked; he sneezed: The reason well I knew; He thought that I, to speak well pleased, Would say, 'Long life to you!'

## II - He

3. I wreathed with flowers on day my brow, The angry tempest lowers; She cries, 'Pray, for what woman now Do you put on your flowers?'
4. 'I love you mor than all beside,' 'T was thus I gently spoke; 'What all, what all?' she instant cried; And all her anger woke.
5. 'While here I live, I leave you not, 'I said to calm her fears. She cried, 'There, then, I read your thought'; And straight dissolved in tears.
6. 'Each day I called to mind your charms,' 'O, then, you had forgot, 'She cried, and then her opened arms, Forthwith embraced me not.
7. She hailed me when I sneezed one day; But straight with anger seized, She cried; 'Who was the woman, pray, Thinking of whom you sneezed?'
8. And so next time I checked my sneeze; She forthwith wept and cried, (That woman difficult to please), 'Your thoughts from me you hide.'
9. I then began to soothe and coax, To calm her jealous mind; 'I see', quoth she, 'to other folks How you are wondrous kind'
10. I silent sat, but thought the more, And gaze on her. Then she Cried out. 'While thus you eye me o'er. Tell me whose form you see'.

# 132. புலவி நுணுக்கம்

பெண்இயலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. 1311

ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை
நீடுவாழ்க என்பாக்கு அறிந்து. 1312

கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று. 1313

யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று. 1314

இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்நிறை நீர்கொண் டனள். 1315

உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள். 1316

வழுத்தினாள் தும்மினே னாக அழித்துஅழுதாள்
யார்உள்ளித் தும்மினீர் என்று. 1317

தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்
எம்மை மறைத்திரோ என்று. 1318

தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று. 1319

நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யார்உள்ளி நோக்கினீர் என்று. 1320

## 133. The Pleasures of 'Temporary variance'

1. Although there be no fault in him, the sweetness of his love Hath power in me a fretful jealousy to move.

2. My 'anger feigned' gives but a little pain; And when affection droops, it makes it bloom again.

3. Is there a bliss in any world more utterly divine, That 'coyness gives, when hearts as earth and water join?

4. 'Within the anger feigned' that closed love's tie doth bind, A weapon lurks, which quite breaks down my mind.

5. Though free from fault, from loved one's tender arms To be estranged a while hath its own special charms.

6. 'Tis sweeter to digest your food than 'tis to eat; In love, than union's self is anger feigned more sweet.

7. In lovers' quarrels, 'tis the one that first gives way, That in re-union's joy is seen to win the day.

8. And shall we ever more the sweetness know of that embrace With dewy brow; to which 'feigned anger' lent its piquant grace.

9. Let her, whose jewels brightly shine, aversion feign! That I may still plead on, O night, prolong thy reign!

10. A 'feigned aversion' coy to pleasure gives a zest; The pleasure's crowned when breast is clasped to breast.

## 133. ஊடல் உவகை

இல்லை தவறுஅவர்க்கு ஆயினும் ஊடுதல்
வல்லது அவர் அளிக்கு மாறு. 1321

ஊடலில் தோன்றும் சிறுதுனி நல்அளி
வாடினும் பாடு பெறும். 1322

புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீர்இயைந் தன்னார் அகத்து. 1323

புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்என்
உள்ளம் உடைக்கும் படை. 1324

தவறிலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்தோள்
அகறலின் ஆங்குஒன்று உடைத்து. 1325

உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது. 1326

ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலில் காணப் படும். 1327

ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலில் தோன்றிய உப்பு. 1328

ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப
நீடுக மன்னோ இரா. 1329

ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்குஇன்பம்
கூடி முயங்கப் பெறின். 1330

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

◆ ◆ ◆

# திருக்குறள்

தமிழ் – ஆங்கிலம்

# THIRUKURAL

TAMIL-ENGLISH



-81-234-0949-4



9 788123 409498

Code No. A1376 Rs.30.00

NCBH

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,

41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,

அம்பத்தூர், சென்னை - 600 098.

☎ : 26251968, 26359906, 26258410